உ

முருகன் துணை

# முகவுரை

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

இச்சிறு நூலில் சிவனடி மறவாத சிறுத்தொண்டர் பெருமையைச் சிறிது விளக்கியுள்ளேன். அறிவானும் பருவத்தானும் சிறியேன் இச்சிறு பணியைச் செய்து முடிக்க எண்ணியபோது செயற்கரிய செயலாகவே தோன்றியது. ‘முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்போ’ னாகிய முருகப்பெருமான் திருவருளாலும் குருவருளாலும் எனது பணி ஒருவாறு நிறைவேறியது. இதனை அறிஞர் உலகம் ஆதரிக்கும் என்று நம்புகிறேன்.

ரா. சு. இராமலிங்கம்.

# பொருளடக்கம்



## முதற்பகுதி



## இரண்டாம் பகுதி



## மூன்றாம் பகுதி





# செயற்கரிய செயலும் பிள்ளைப் பாசமும்



## முதற் பகுதி

### முன்னுரை

இன்ப வடிவாய இறைவன் திருவருளால், உலகில் வாழும் உயிர்த் தொகுதிகளுள் மக்கள் தொகுதியே மாண்புடையதென உயர்ந்தோர் உரைப்பர். இப் பிறவியைப் பெற்றவரே கற்பனவற்றைக் கசடறக் கற்று, இறைவனது 'அற்புதக் கஞ்சமலர் பொற்பதம்' வணங்கி, உயிரினும் சிறந்த ஒழுக்க நெறி நின்று உய்வராதலால், இப் பிறவி எப்பிறவியினும் சிறந்ததாகக் கருதப்படும். மேலும், 'இந்திரன் முதலிய இமையவர் பதங்களும், அந்தமில் இன்பத்து அழிவில் வீடும் நெறியறிந்து எய்துதற் குரியார்' அறிவறிந்த மாந்தரே ஆவராதலாலும், இப்பிறவியைச் சிறந்ததென இயம்புவர். எனவே, மகிமை வாய்ந்த மனிதப் பிறவி கிடைத்தலே அருமை ஆகும். "அரிதரிது மானிடராதல் அரிது" என்று ஔவையார் அறிவிக்கின்றார்.

"எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான்
யாதினும் அரிதரிதுகாண்;

இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ ?
ஏது வருமோ ? அறிகிலேன் !

என்று தாயுமானவர் தயங்குகின்றார். ஆகவே, மனிதப் பிறவி மிகப் பெருமையும், வெகு அருமையும் வாய்ந்தது என்பது இதனால் விளங்கும்.

இங்ஙனம், பெறுதற்கரிய சிறப்பும் பெருமையும் பொருந்திய இப்பிறவியைப் பெற்றவர் யாவரும் கற்பன கற்று விதித்தன செய்து விலக்கியன ஒழித்து வாழ வேண்டும். இனிப்பிறவாநெறி அடைய இறைவனை வழிபட வேண்டும். அங்ஙனம் வழிபட்டு உய்யும் மக்களே அரிய பிறவியின் உயரிய பயனை அடைந்தவராவர். புனிதம் நிறைந்த மனிதப்பிறப்பின் பயனை மறந்து மனம்போல் திரிந்து வாழ்நாளை வீணாக்கி அலைவாரும், நாத்தழும்பேற நாத்திகம்பேசித் திரிவாரும் இவ்வுலகில் பலராவர். இவரை யார் வாழ்க்கை பயனின்றி வீணாய்க்கழிதலால், " இவர் பிறத்தலினும் பிறவாமை நன்று " என்று வள்ளுவ வள்ளல் கருதுகின்றார்.

" தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று "

என்றபடி, மக்களாய்ப் பிறந்தால் புகழுக்குரிய குணங்களோடு பிறக்கவேண்டும். அக்குணம் இல்லாதவர் பிறத்த

வினும் பிறவாமல் ஒழிதல் நன்றாகும். முன்னர் கூறியபடி, மக்கட் பிறவி பெறுதற்கரிய பெருமையும் அருமையும் பொருந்தியதேனும், மனிதன் நிலையில்லாதவன். "நேற்றிருந்தவன் இன்று இல்லையானான்!" என்று இவ்வுலகம் அடிக்கடி சொல்லுகின்றது.

"இனியே தெமக்குன்னருள் வருமோ? வெனக்கருதி
ஏங்குதே நெஞ்சம் ஐயோ!
இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்று
எண்ணவோ திடமில்லையே!"

என்று தாயுமானவர் ஏங்குகின்றார். "நேற்று மணம் புரிந்தார் இன்று நீறானாரே!" என்று இரக்கமே வடிவாய இராமலிங்க அடிகள் இரங்குகின்றார். மணமகனே பிணமகனாய் மணப்பறையே பிணப்பறையாய் மாறுவதை அடிக்கடி காணலாம். இங்ஙனமே இவ்வுலகப் பொருள்கள் யாவும் அழிந்தொழிந்து சிதைவுறும். ஆனால் புகழ் மட்டும் என்றும் அழியாது நின்று நிலவும்.

"போன்றுதல் ஒருகாலத்துந்
தவிருமோ? பொதுமைத் தன்றே?
இன்றுளார் நாளை மாள்வார்
புகழுக்கும் இறுதியுண்டோ?"

என்று இலங்கை வேந்தனும் இராவணன் வாயிலாகக் கவி

வேந்தராம் கம்பர் கூறுவது கவனிக்கற்குரியது. ஓதற் கெளிதாய் உணர்தற்கரிதாகி வேதப்பொருளாய் விளங்கும் பொதுமறையில்,

"ஒன்ரு வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்ருது நிற்ப தொன்றில்"

என்று வள்ளுவர் பெருமான் கூறுகின்ருர். எனவே, நிலையற்ற இவ்வுலகில் புகழ்மட்டும் நிலைத்து நிற்குமாகையால், பெறுதற்கரிய மக்கட் பிறவியைப் பெற்றவர் யாவரும், ஏதேனுமொரு நல்ல வகையில் சிறப்புற்று நின்று, என்றும் குன்ருது நிலைத்து நிற்கும் புகழினையடைய முயல வேண்டும். அரும்பெரும் புகழை அடைவதற்குப் பல்வேறு வழிகளுண்டு. அவைகளில், செயற்கரிய கருமங்களைச் செய்தலும் ஒரு சிறந்த முறையாதலால், அதனைப்பற்றிச் சிறிது இங்கு ஆராய்வோம்.



# செயற்கரிய செயல்



பாரெலாம் புகழும் பொதுமறை அருளிய பெருமகனும் வள்ளுவர் பெரியாரியல்பையும் சிறியாரியல்பையும் சொல்லுங்கால், "செய்தற்கு எளியவற்றைச் செய்யாது அரியவற்றைச் செய்பவரே பெரியார்" என்றும், "எளியவற்றைச் செய்து அரியவற்றைச் செய்யமாட்டாதவரே சிறியார்" என்றும் சொல்லுகின்றார்.

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலாதார்"

இவ்வாறு சொல்லிய செந்நாப்போதார் செயற்கரிய செயல் யாது? எனச் சொன்னாரில்லை! இதுபோலவே, இன்னுமொரு குறளில் "தம்மால் எய்துவதற்கு அரியதொன்று தானே வந்து கூடியக்கால், அப்பொழுதே செய்தற்கு அரியதைச் செய்துவிடு" என்று கூறுகிறார்.

"எய்தற்கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற்கரிய செயல்"

இவற்றுள், "செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர் செயற்கரிய செய்கலாதார்" என்னும் பொதுமறை "நீத்தார் பெருமை" யில் சொல்லப்படுவதால், "செயற்கரியவாவன இயமம் நியமம் முதலாய எண்வகை யோக

வுறுப்புக்கள்" என்று உரையாசிரியர் பரிமேலழகர் உரைக்கின்றார். இயமம், நியமம், ஆதனம், பிராணுயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி ஆகியவை எண்வகை யோகங்கள் எனப்படும். இவைபோலும் செயல்களைச் செய்தல் ஐம்பொறி அடக்கும் ஆற்றல் அமைந்த அறவோருக்கேயன்றிப் பிறருக்கு அரிதாகும். ஐம்பொறி அடக்கும் ஆற்றலும் சிந்தையை அடக்கும் ஆற்றல் அமைந்தவருக்கே அமையும். ஆனால், சிந்தையை அடக்கிச் சும்மா இருத்தல் மிகவும் அரியதொரு செயல்.

"மதம்பொழியும் யானையையும் மனம்போல் நடத்தலாம்; காட்டில் வாழும் கரடி வாயையும் வெம்புலி வாயையும் கட்டலாம்; சீற்றம் நிறைந்த சிங்கத்தின் முதுகின் மேலும் ஏறலாம்; புற்றில் வாழும் பாம்பையும் பற்றிப் பிடித்து ஆட்டலாம்; வெய்ய நெருப்பில் பாதரசம் விட்டுப் பஞ்சலோகங்களையும் பசும்பொன்னாக்கி விற்றுப் பிழைக்கலாம்; அயலார் காணுமல் அலையலாம்; விண்ணவரையும் ஏவல்கேட்கப் பண்ணலாம்; சந்ததமும் இளமையோடிருந்து சுந்தரம் நிறைந்த வடிவம் பெற்று வாழலாம்; மற்றொரு உடலினும் புகுதலாம்; நீரினும் நடக்கலாம்; நெருப்பிலும் இருக்கலாம்; தன்னிகரில்லாச் சித்தியைப் பெற்றுச் சிறப்புறலாம்; ஆனால், சிந்தையை அடக்கியே சும்மா

யிருக்கின்ற திறம் மட்டும் அரிது" என்று தாயுமானவர் அறிவிக்கின்றார்.

கந்துக மதக்கரியை வசமா நடத்தலாம்;
கரடிவெம் புலி வாயையும் கட்டலாம்;
ஒரு சிங்க முதுகின்மேற் கொள்ளலாம்;
கட்செவி யெடுத்தாட்டலாம்;
வெந்தழலினிரதம் வைத்தைந்து லோகத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்;
வேறொருவர் காணாம லுலகத்துலாவலாம்;
விண்ணவரை யேவல் கொள்ளலாம்;
சந்ததமு மிளமையோ டிருக்கலாம்
மற்றொரு சரீரத்தினும் புகுதலாம்
சலமேனடக்கலாம்; கனன்மேலிருக்கலாம்;
தன்னிகரில் சித்திபெறலாம்;
சிந்தையை யடக்கியே சும்மாவிருக்கின்ற
திறம் அரிது; சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே!
தேசோமயானந்தமே!

இனி, "எய்தற்கரிய தியைந்தக்கா லந்நிலையே செய்தற் கரிய செயல்" என்னும் குறள் "காலமறிதல்" என்னும் அதிகாரத்தில் கூறப்படுவதால், "செய்தற்கு அரிய செயல்

என்றால் செய்தற்கரிய வினைகளைச் செய்தலே" என்று பரிமேலழகர் பொருள் செய்கின்றார். இல்வாழ்வார்க்குரிய செயல்களில் புகழ்தரும் செயல்களை செயற்கரிய செயல்கள் என்று இங்கே சொல்லலாம். இவ்வுலகியலில், இன்னவை எல்லாம் அரியன என்றும், இன்னவை எல்லாம் எளியன என்றும் அறுதியிட்டுச் சொல்லுதல் அருமையாகும். ஒருவருக்கு அரியதாக இருக்கும் செயல் வேறொருவருக்கு எளியதாகத் தோன்றலாம். இன்னும் ஒருவருக்கு எளியதாக இருக்கும் செயல் மற்றும் ஒருவருக்கு அரியதாகத் தோன்றலாம். அரியன என்பதும் எளியன என்பதும் அவரவர் அறிவையும் உடல் நிலையையும் பொறுத்தனவாகும்.

சிலவேளை திருவினையாக்கும் முயற்சியால் அரியனவும் எளியனவாக ஆதல் கூடும். "முயன்றால் முடியாத தொன்றில்லை" என்றபடி முயன்றால் எல்லா வினையும் எளிதில் முடியும்.

> "அருவினை யென்ப வுளவோ? கருவியாற்
> காலமறிந்து செயின்"

என்றவாறு, எடுத்த வினையை முடித்தற்குரிய கருவியுடன் செய்தற்குரிய காலம் அறிந்து செய்வாராயின் செய்தற்கரிய வினை என்று சொல்லப்படுவது இல்லை. இன்னமும், "காலம்

அறிந்து இடத்தாற் செயின், ஞாலங் கருதினும் கைகூடும்” என்று வள்ளுவர் பெருமான் கூறுகின்றார். எனவே, செய்யும் வினையைக் காலமும் இடமும் அறிந்து செய்தால், கைகூடாதனவும் கைகூடுமாதலால், பெறுதற்கரிய பிறவியைப் பெற்றுள்ள மக்கள் எய்தற்கரிய காலம் நேர்ந்தும் செய்தற்கரிய வினைகளை முயற்சியுடன் செய்து முடிக்க வேண்டும்.

ஆகவே, துறவறம் பூண்டார்க்குச் சிந்தையை அடக்கிச் சும்மா இருத்தலே அரிய செயல் என்பதும், இல்லறம் கொண்டார்க்குப் புகழ்தரும் வினைகளைச் செய்தலே அரிய செயல் என்பதும் இவற்றால் பெறப்படும். “இல்லறமல்லது நல்லறமன்று” என்றபடி, துறவறத்தினும் இல்லறமே எவர்க்கும் சிறந்தது என்று கருதப்படுவது போலவே, துறவறம் பூண்டு ஐம்பொறி அடக்கி அருந்தவஞ் செய்யும் அரிய செயலினும், இல்லறங் கொண்டு புகழ்தரும் வினைகளைச் செய்யும் அரிய செயலே சிறந்தது என்று அறிஞரால் கருதப்படும்.

அறுபான்மும்மை அடியவரில் பலரும், வரையாது வழங்கும் வள்ளல்களில் பலரும் இல்லறம் என்னும் நல்லறம் கொண்டே அரும் பெரும் செயல்களைச் செய்து சிறப்புற்றார்கள்.

"மன்னு வுலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே!"

என்றபடி, எப்பொருளும் நிலையாத இவ்வுலகில் என்றும் நிலைத்திருக்க எண்ணிய பலர் செயற்கரும் வினைகள் பலப் பல செய்து புகழுடம்பை நிறுத்திப் புலால் உடம்பை மறைத்து மாய்ந்தனர்.

**திருநீல கண்டர்**

'இளமை மீதூர இன்பத்துறையில் எளியரான' தம் கணவர் அங்கோர் பரத்தைபாற் சென்றதை நினைந்து மனம் பொறுது வருந்திய மங்கை "தீண்டுவீராகில் எம்மைத் திருநீலகண்டம்" என்று தெரிவித்தது கேட்ட திருநீலகண்டர் எதிலார் போல நோக்கி "எம்மை என்றதனுல் மற்றை மாதரார் தம்மை என்றன் மனத்திலும் தீண்டேன்" என்று அரியதொரு விரதம் பூண்டு பெரியதொரு புகழ் பெற்றார்.

**மெய்ப்பொருண் நாயனர்**

சிவவேடமே மெய்ப்பொருள் எனத் தொழுது நின்ற மெய்ப்பொருண் நாயனுரை வஞ்சவேடங் கொண்டுவந்த முத்திநாதன் வாளால் குத்தினுன். அதனை அறிந்த தத்தன் வெருண் டெழுந்து விரைந்து வந்து தன் தலைவனைக் கொன்ற பாதகன் தலையை அரியத் துணிந்தான். அவ்வமயம், மெய்ப்பொருளார் "வஞ்சனையால் உயிர்

3085



கவர்ந்த வஞ்சகன் ஒழியட்டும்" என்று கொஞ்சமும் நினையாமல், "மெய்த்தவ வேடமே மெய்ப்பொருள்" எனத் தொழுது "தத்தா! நமர்; ஒன்றும் செய்யாதே!" என்று தறைப்படுமளவில் தடுத்து வீழ்ந்தார்!

மறைத்தவன் புகுந்த போதே
மனமங்கு வைத்த தத்தன்
இறைப் பொழுதின் கட்கூடி
வாளினு லெறிய லுற்றுன்;
நிறைத்த செங்குருதி சோர
வீழ்கின்றுர் நீண்டகையால்
தறைப் படுமளவில் "தத்தா!
நமர்" எனத் தடுத்து வீழ்ந்தார்!

சீதேவி தோன்றிய பாற்கடலில் மூதேவியும் தோன்றியதுபோல், குமணன் தோன்றிய வயிற்றில் அமணனும் தோன்றினன். வையகமெய்தினும் வானகமெய்தினும் நெறிவழுவாத குமணன் வரையாது வழங்கும் வள்ளலாய் விளங்கினன். அதனைக்கண்ட அமணன் ஆசை நோயால் அண்ணனது அரசினைப் பறிக்க ஆவல்கொண்டான். "அடுத்த செல்வத்தின் அருமை அறியாமல், தடுத்துரைப்பதையும் கேளாமல் ஏற்பவர் கையில் எடுத்துக்கொடுத்து அழிந்தவர்

குமண வள்ளல்

கோடாநுகோடிப்பேர் ஆவர். ஆதலே மிகவும் இன்னலைத் தந்திடும். ஆதலால், இன்றுதொட்டு அரசினை என்னிடம் தந்து நீ வனஞ் செல்லவேண்டும்; இல்லையேல் பொன்று மாறு பொருது வெல்லுவேன்" என்று பகர்ந்தான். அவ்வாறு அடாதன கூறியதைக் கேட்டும் குமண வள்ளல் அணுவளவும் மனம் கோணுமல் அவன் விரும்பியபடியே அரசைநல்கி, "இருளுடை உலகம் காக்கும் இன்னலுக்கு இயைந்து நின்ற உன்னை இன்று முதல் இளவல் என்று கருதுகிலேன்; அடவியிற் சென்று அருந்தவம் புரியுமாறு செய்தமையால், அகவிருளகற்றி அறிவொளி வீசும் அருட்குரு எனவே அகத்தில் எண்ணுவேன்" என்று மொழிந்து, அன்றலர்ந்த செந்தாமரையை வென்ற முகத்துடன் அகமிக மகிழ்ந்து அடவியிற் புகுந்து காட்டில் இலையும் காயும் கனியும் அயின்று கானகப்புல்லில் துயின்று காலங்கழித்து வருவாராயினர்.

இவ்வாறு அறஞ்செய விரும்பாத அமணன் அறநெறி தவறாத தமையன் அரசினைப் பறித்ததோடும் அமையாமல், அவரது தலையைக் கொய்து வருவாருக்குக் கோடி செம்பொன் கொடுப்பதாகவும் பல்லோர் அறியப் பறையறைவித்தான். அதனை அறிந்த ஒருவன் விரைந்துவந்து குமணனைக் கண்டு அமணன் செயலைஅறிவித்தான். அப்பழிமொழியைக் கேட்ட குமணன் கோபம் கொள்ளாமல் அளவிலா மகிழ்

வடைந்து ஆவி பிரிந்தபின் நாய் நரி பேயிவைகளுக்கு இரையாகும் இவ்வுடலில் ஒரு பாகமாகிய சென்னியை—அடுப்பவர் அருவருக்கச் சீயொடு புழுவும் மண்ணுஞ் சேருமிச் சென்னியைக் கோடிப் பொன் விலையெனக் கூறி விளங்கச்செய்த என் பின்னவனே அன்னையினும் இனியவனுவான்" என்று எண்ணுவாராயினார். அன்று அவர் கருதி நின்றதை அடியில்வரும் கவியில் அழகுறக் காணலாம்.

ஆயுவோ யுற்றகாலை அடுப்பவ ரருவருக்கச்
சீயோடு புழுவும் மண்ணுஞ் சேருமிச் சென்னிதன்னை
மீயுயர் செம்பொன்கோடி விலையென விளங்கச்செய்தான்
தாயினு மினியன் எம்பிதானெனக் கருதலுற்றான்.

சிறிது வாக்கு வாதம் நிகழ்ந்தாலும் மண்டை உடையும்படி சண்டை செய்யும் இக்கால மக்களுக்கும் இவ்வள்ளலுக்கும் உள்ள வேற்றுமையைச் சற்று இங்கு சிந்திக்க வேண்டும்.

ஒரு சமயம், வறுமையால் வாடிய பாவலர் ஒருவர் குமணனைக் காட்டிலே கண்டு வாட்டமாய் நின்று "பால் காணாத பச்சிளங்குழவி பெற்ற தாயைப் பார்க்க—அவளும் என் முகம் நோக்க—யானும் நின்முகம் நோக்கி வந்தனன்" என்று மொழிந்தார். அவ்வாறு குறையினை முறையிட்டு நின்ற கவிஞரிடம் கொடையிற் சிறந்த குமணன் "அருந்தமிழ்ப் புலவோய்! வந்தவருக்கெல்லாம் வாரி வாரி வழங்கும்

நாளில் நீவிர் வரவில்லை; இவ்வாயம் வந்தீர்; தலையைக் கொண்டுபோய்த் தம்பியிடம் கொடுத்து அதன் விலையைப் பெற்று வறுமை நோயை அகற்றிக்கொள்ளும்" என்று கூறுவாராயினர்.

"அந்தநாள் வந்திலை யருந்தமிழ்ப் புலவோய்!
இந்தநாள் வந்துநீ நொந்தெனை யடைந்தாய்;
தலைதனைக் கொடுபோய்த் தம்பிகைக் கொடுத்ததன்
விலைதனைப் பெற்றுன் வெறுமை நோய்களையே!"

இங்ஙனம் அருட்பெருஞ் சோதித் தனிப்பெருங் கருணை ஆண்டவனிடம் அளவிலா அன்புசெலுத்தும் அடியவர்களும், இல்லை என்று வந்தவருக்கு இல்லை என்று சொல்லாமல் உயிர்கொடுத்தும் உதவக்கூடிய உயரிய குணம் வாய்ந்த வள்ளல்களும் செயற்கரும் செயல்களைச் செய்து பெறற்கரும் புகழைப் பெற்றனர். இன்னனைய அரும் பெரும் செயல்களைச் செய்து சிறப்புற்றவர் இன்னும் பலராவர். அவர்களைப் பற்றி எல்லாம் விரிவாக எடுத்துரைத்தால் விரியும் ஆதலால் விடுத்து, "அரியவற்றினும் அரியது" என்று கருதத்தக்க பெருஞ் செயலினைச் செய்த ஒரு பெரியாரைப் பற்றி மட்டும் சற்று விரிவாகக் கூறுவதே இங்கு எடுத்துக்கொண்ட பொருளுக்குப் பொருத்தமாகும். அப்பெரியார் யாவரெனின், சிறுத்தொண்டர் ஆவார்.

# சிறுத்தொண்ட நாயனார்



சொல்லவும் பெரிய தொண்டர்தம் பெருமையைச் செந்தமிழ் வல்ல சேக்கிழார் தெய்வ மணக்கும் செய்யுளால் அருளிச்செய்து சிறப்புற்றார். அப்பெருந்தகையாளர் அருளிச் செய்த பெரிய புராணம் முத்திக்கொரு வித்தாய் அமைந்துள்ளது. அதிலொரு நம்பிக்கை வைத்து அன்புடன் கற்றால் அவ்விழுமிய நூலின் உயரிய பயனை அனைவரும் அடையலாம். அளவிறந்த நம்பிக்கையுடன் அந்நூலைப் படிப்பவர் அனைவரும் அவரது பக்தி மணக்கும் பாவின் அருமையும், அவர் பரவும் அடியவர் பெருமையும் அறிந்து மகிழ்வர் என்பதில் ஐயம்இல்லை. 'உறுதி உய்வளிக்கும்.'

'திருநாட்டு வளங்காட்டும் செங்காட்டங்குடி'யில் திருத்தொண்டிற் சிறந்த சிறுத்தொண்டர் தோன்றினார்.

"மலர் புகழ் மாமாத்திரர்தங்
குலம் பெருக வந்துள்ளார்;
பலர் புகழுந் திருநாமம்
பரஞ்சோதியார் என்பார்"

இதனால், அவர் மாமாத்திரர் குலத்தில் அவதரித்தார் என்பதும், அவரது இயற்பெயர் பரஞ்சோதியார் என்பதும் அறியலாகும். அவர் தமது இளம் பருவத்தில் இறைவனிடம்

இடையறாத அன்புகொண்டார். நூல் பல கற்று நுண்ணறிவு பெற்றார். படைக்கலப் பயிற்சிகள் பலவும் பயின்று சிறந்த போர்வீரராயும் விளங்கினார். அவரது அறிவாற்றலையும் அமராற்றலையும் அறிந்த அந்நாட்டு அரசன் அவரை அழைத்துத் தன் சேனைக்குத் தலைவராக ஆக்கினான். அவர் படைத்தலைவராக ஆனது முதல் ஆங்கு நேர்ந்த அமர்களில் எல்லாம் அவர் வெற்றியேயன்றி வேறொன்று கண்டிலார். எங்கும் சென்று எவரையும் வென்று வருவது கண்ட வேந்தனும் வெற்றிவீரரது வில்லாண்மையை ஒரு சமயம் வியந்து நயந்து புகழ்ந்தான்.

அவ்வமயம், மந்திரி ஒருவர் எழுந்து "மன்னர் மன்னனே! இறைவன் திருவருள் வலிமையுடைய இவருக்கு எதிர் இவ்வுலகில் இல்லை" என்று மொழிந்தார். மதிநலம் வாய்ந்த மந்திரி மொழிகளைக் குணநலம் வாய்ந்த காவலன் கேட்டான். அடியவர் பெருமையை அறிந்தனனாய்,

"உம்பர் பிரான் அடியாரை
உணராதே கெட்டொழிந்தேன்!
வெம்பு கொடும் போர்முனையில்
விட்டிருந்தேன்! எனவெருவேற்று"

வருந்தினான். "என் சிறுமையை உம் பெருமையினால்

பொறுக்கவேண்டும்" எனப் பணிந்தான். அளவுகடந்த நிதிக்குவை அளித்து "உமது மனம்போல் இதனைக் கொண்டு உயரிய தொண்டுசெய்யும்" என விடைகொடுத்து அனுப்பினன்.

மன்னவனிடம் விடை கொண்ட தொண்டர் தமது சொந்த மனைக்கு வந்து சேர்ந்தார். சிவனடியார்க்கு நாள் தோறும் திருவமுது முன்னூட்டிப் பின்னுண்ணும் நன்னெறியைக் கைக்கொண்டார். தொண்டர் எவரையேனும் அவர் கண்டால் தாயைக்கண்ட சேயைப்போல் அகங் களிப்பார். அடியவர் முன்பு அங்கம் குறுகி வெகு பணிவுடன் மிகச் சிறியராய் நின்று, தாழ்வெனும் தன்மை கொண்டு தொண்டு செய்தாராதலால், அவர் சிறுத்தொண்டர் என்று அழைக்கப்பெற்றார்.

"நாதனடியார் தம்மை
நயப்பாட்டு வழிபாட்டால்
மேதகையார் அவர் முன்பு
மிகச் சிறியராயடைந்தார்;
ஆதலினுற் சிறுத்தொண்டர்
எனநிகழ்ந்தா ரவனியின்மேல்"

இறைவனடியார் நாளும் வந்து இல்லில் உண்டு மகிழ்வதை அவர் கண்டு மகிழ்ந்தார். அவரைப்போலவே அவரது

மனைவியரான திருவெண்காட்டு நங்கையும் விருந்தோம்பும் ஆர்வம் நிறைந்தவர். இங்ஙனம் கணவனும் மனைவியும் ஒருமனப்பட்டு அடியவருக்கு அமுதிட்டு வாழுங்கால், சீராளன் என்னும் மைந்தன் அவதரித்து வளரிளம் பிறையே போல் வளர்ந்து வந்தான். தாயும் தந்தையும் "பெறுதற் கரிய நற்றவப் புதல்வனைப் பெற்றோம்" என்று உள்ளம் தழைத்தனர். ஒருசமயம் நாளும் இன்னிசை பாடி நற்றமிழ் பரப்பிய ஞானசம்பந்தர் வந்து பண்புடைய தொண்டருடன் பயின்று அமுதருந்தி நண்பு செய்து நயந்தார்.

இவ்வாறு, அருந்தவப் பெரியாரும் விருந்துண்ணப் பெற்ற சிறுத்தொண்டரது அன்பை நுகர்ந்து அருளுவதற் குக் கருணையங்கடல் திருவுளம் கொண்டார். வைரவ வேடமுடன் வரலானார். கரிய நெடும் சடைமுடியைக் காள மேகச் சுருளேபோல் கொந்தளமாகப் பரப்பிக்கொண்டு அன்று அவர் வந்த நிலையை ஆசிரியர் அழகொழுகும் கவி களால் அறிவிக்கின்றார்.

"விரிசுடர்ச் செம்பவள வொளி
மெய்யில் விரிக்கும் விளங்குசுடர்த்
திருநுதன்மேல் திருநீற்றுத்
தனிப்பொட்டுத் திகழ்ந்திலங்க"

வந்தார் என்றும், "விளங்கு திருக்கழுத்தில் வெண்பளிங்கு

வடம் திகழ வந்தார்" என்றும் கவிஞர் வருணிக்கின்றார். காதணியும் கைவளையும் காற்சிலம்பும் அணிந்து நம் பெருமான் புலிமேல் நடந்து வருங்கால், அணிகளெல்லாம் இசையினுமினிய ஓசையை அளித்தன. காற்சிலம்பு கலீர் கலீர் என ஒலித்தது. செவிக்கும் சிந்தைக்கும் இன்பம் தரும் சிலம்பொலியில் ஈடுபட்ட சேக்கிழார் சிறந்ததொரு கற்பனை செய்கின்றார். "பொருவில் பெருமைத் தொண்டருக்குப் புலிமேல் வந்து அருள்புரியும் பெருங் கருணையின் திறம் கண்டு பிரானருளை பேணுங்கள்! வருமன்பின் வழி நில்லுங்கள்!" என மறைகளெலாம் அறைவனபோல், திருவடியில் விளங்கிய திருச்சிலம்பு திசைமுழுதும் கேட்கும்படி ஒலித்ததாம்!

"பொருவில் திருத்தொண்டர்க்குப்
புலிமேல் வந்தருள் புரியும்
பெருகருளின் திறங் கண்டு
பிரானருளே பேணுவீர்!
வருமன்பின் வழிநிற்பீர்!
என மறைபூண்டறைவனபோல்
திருவடிமேல் திருச்சிலம்பு
திசைமுழுதும் செலவொலிப்ப"

எனக் கவிஞர் செய்யும் கற்பனை 'கற்றவர் விழுங்கும் கற்பகக் கனி'யாகும். 'பாவெல்லாம் பக்தி மணக்கும்'

என்னும் உண்மைக்கு உதாரணமாக இவ்விழுமிய கவி விளங்குகின்றது. இவ்வாறு அருள்பொழியும் திருமுகம் கொண்ட பயிரவர் அணிகள் அசைவுற நடந்து, செந்தமிழ் நாட்டில் சிறப்புற்றோங்கிய செங்காட்டங்குடிக்கு வந்து சேர்ந்தார். தாங்கமுடியாத பசியுடையார் போலத் தளர்ந்து மெலிந்து தெருவுதொறும் அலைந்து திரிந்தார். கண்டாரைச் சிறுத்தொண்டர் மனை வினவிக் கடிதணைந்தார். வாயிலில் வந்து நின்று "ஓய்! தொண்டரே!" என ஓலமிட்டுக் கூவி யழைத்தார். சந்தனமங்கை என்னும் பணிப்பெண் அவர் முன்வந்து அடிவணங்கி "சிவனடியாரைத் தேடியே சிறுத் தொண்டர் சென்றுளார்" என்று அறிவித்து வீட்டில் எழுந்தருளவேண்டினள். அதற்கு அவர் மாதர் தனியே இருக்கும் மனையில் தங்கி இருக்க மறுத்தவராய், அவ்விடம் விட்டு அகல ஆரம்பித்தனர்.

அவ்வமயம், அன்புமிக்க திருவெண்காட்டு அம்மை அங்கு வந்து, அகல்வார்போல் நின்ற அடியவரை நோக்கி "அனுதினமும் அடியார்க்கு அமுதளிக்கும் எமது நாயகன் இன்று அடியவர் ஒருவரையும் காணுமல் தேடிப்போனுர்; புதுமையாக வந்துள்ள உமது அரிய வேடத்தை அவர் கண்டால் பெரியபேறென்று அகமகிழ்வார்; இப்பொழுதே வந்துவிடுவார்; இனித்தாழார்; இங்கு எழுந்தருளி இருக்க வேண்டும்" என்று பணிந்து நின்று நயந்து வேண்டினுள்.

"அம்பலவர் அடியாரை
அமுது செய்விப்பார்; இற்றைக்கு
எம்பெருமான் யாவரையுங்
கண்டிலர்; தேடிப்போனார்;
வம்பெனை நீர் எழுந்தருளி
வருந் திருவேடங் கண்டால்
தம் பெரிய பேறென்றே
மிக மகிழ்வர்; இனித்தாழார்."

இவ்வாறு இன்சொல் இயம்பியும் அவர் இணங்கவில்லை. அருகில் இருக்கும் ஆத்தியின்கீழ் இருப்பதாக அறிவித்துச் செல்வார் ஆயினர்.

இந்நிலையில், சிவனடியாரைத் தேடிச்சென்ற சிறுத் தொண்டர் ஒருவரையுங் காணுமல் உள்ளங்கலங்கி இல்லம் வந்தார். தவவேடம் கொண்டு சிவனடியார் வந்து திரும்பி யதையும், திருவாத்திக்கருகில் இருப்பதாகத் தெரிவித்ததை யும் தேவியார் கூறக்கேட்டு மனம் தெளிந்தார். "அடியேன் உய்ந்தேன்" என்று அகங்களித்தார். விரைந்தெழுந்து சென்று கண்டு பாதம் பணிந்தார். தொழுது நின்ற தொண் டரை நோக்கி "நீரோ பெரிய சிறுத்தொண்டர்?" என்று எல்லாம் அறிந்தவர் ஏதும் அறியாதவர்போல் வினவவும், நலமே கருதும் நாயனார் "சிறுத்தொண்டன் நானே என நாதனடியார் கருணையினல் நவில்வார்கள்; இறைவனடியார்

ஒருவரையும் காணாத இவ்வரிய வேளையில், தவத்தால் உம்மைக் கண்டேன்; அடியேன் இல்லத்தில் அமுதுண்ண இணங்கவேண்டும்" என வணங்கினார்.

உடனே, அடியவருக்கு வேதனை கொடுத்துச் சோதனை செய்யவந்த பயிரவர் "அருந்தவப் பெரியவரே! உம்மைக் காணும்படியால் வடநாடு கடந்து வந்துளோம்; எம்மைப் பரிந்தூட்ட உம்மால் முடியாது" என்று மொழிந்தார். அடியவரை எப்படியேனும் அழைத்துச் சென்று அமுது செய்விக்கக் கருதிய நாயனார் பயிரவரைப் பார்த்து "எண்ணாது அடியேன் எதனையும் மொழியேன்; நீவிர் அமுது செயும் இயல்பதனை அருளிச் செய்தால், தேடற்கரிய எதனையும் தேடிக்கொணர்ந்து தருவேன்; இங்கு ஒன்றும் அருமை இல்லை" என்று சொன்னார். இவ்வாறு "எதுவும் அரியதில்லை" என்றதைக் கேட்டதும், பயிரவக்கோலப் பெருமான் "தொண்டரே! ஆறு மாதங்களுக்கு ஒருமுறை பசுவின் நிணங்கமழும் உணவையே யாம் உண்ணுவோம். அதற்குரிய நாளும் இன்றே ஆகும். அம்முறையில் அமுது செய்ய உம்மால் முடியாது" என்று கருதிய வினைக்கு முன்னுரை கொடுத்தார். அதனைக்கேட்ட நாயனார் அளவிலா மகிழ்வடைந்து "அன்பரே! எண்ணிறந்த பசுக்கள் என்னிடம் உண்டு. உமக்கு அமுதாகும் பசு இன்னதென

3085



அருளிச் செய்தால், யான் அமுது சமைத்துக் காலம் தப்பாமல் வருவேன்" என்று மொழிந்து கைதொழுதார்.

பண்புமிக்க சிறுத்தொண்டர் பரிவுகண்ட பயிரவர் "நண்பரே! நாமுண்ணும் பசுவும் நரபசுவே ஆகும். அதுவும் ஐந்து வயது உடையதாய்—மிகவும் அழகியதாய் இருக்கவேண்டும்" என்று சொன்னதோடு நின்றுவிடாமல் "புண்செய் நோவில் வேலெறிந்தாற்போலும் புகல்வது இன்னம் ஒன்று உண்டு" என்றும் உரைத்தார். அதனைக் கேட்டும் நாயனார் அஞ்சவில்லை. "யாதும் அரியது இல்லை; எதுவும் செய்யலாம்; அதையும் அருளிச்செய்யும்" என்று சொல்லலுற்றார். உடனே, "ஒரு குடிக்கு ஒருவனாய் வளரும் சிறுவனைத் தாய் பிடிக்கத் தாதையரிய இருவரும் உவந்து அமைத்த கறியை யாம் உண்ணுவேம்." என்று நாவு நடுங்காமல் சொல்லிவிட்டார் 'கருணாகரக் கடவுள்.'

"யாது மரிய தில்லை யினி
யீண்ட வருளிச் செய்யுமென
நாதன்றானு மொரு குடிக்கு
நல்ல சிறுவனொரு மகனைத்
தாதையரியத் தாய் பிடிக்கும்
பொழுது தம்மின் மனமுவந்தே
ஏதமின்றி யமைத்த கறி
யாமிட் டுண்ப தெனமொழிந்தார்."

அண்ணலார் அடியார்க்கு அமுது செய்வித்தலே மண்ணினில் பிறந்தார் பெறும் பயன் என எண்ணி வாழும் சிறுத்தொண்டர் "அதுவும் அரிதன்று" என்று அறிவிக்கவே, "அப்படியாயின் வருவேம்" அமுது சமைத்து வாரும்" என்று பெருந்தகையாளர் அருளிச்செய்தனர். அவ்வமயம் அவர் கொண்ட உவகைக்கு அளவே இல்லை. மனமிக மகிழ்ந்து மலரடி பணிந்து மனையை நோக்கி விரைந்து வந்தார்.

அன்புமிக்க அணங்காம் திருவெண்காட்டு அம்மை முன்பு வந்து வரவு நோக்கி முன்னின்று அவரது மலர்ந்த முகம் கண்டு மகிழ்ந்து பாதமலர் பணிந்தபின்பு "அடியவர் வருவரா?" என அவனுடன் வினவினர். நாயனாரும் நங்கையை நோக்கி "குடிக்கோர் சிறுவனாய் — கொள்ளும் பிராயம் ஐந்துளனாய் வளரும் சிறுவனைப் பெற்ற தாய் பிடிக்கப் பிதா அரிந்து இருவரும் மனம் கோணாமல் கறி சமைத்தால் மாதவர் வந்து அமுதுண்டு மகிழ்வதாக மன மிசைந்தார்" என்று மொழிந்தார். அருமைக் கணவன் அவ்வாறு சொன்னதும் அருங்குணங்களெல்லாம் ஒருங்கே அமையப்பெற்ற அம்மையார் "எவ்வளவு கொடுஞ் செயல்? எவர் இதனைச் செய்வார்?" என்றெல்லாம் எண்ணவில்லை யாம்! "அரிய பெரிய தவவேடம் கொண்ட பெரியார்

ஊன் தின்னவும் ஆவல் கொண்டனரே! ஐந்து வயதுப் பாலனை அரியச் சொன்ன அவரும் சிவனடியார் ஆவரோ?" என்றெல்லாம் ஏசவில்லையாம்! "பெருமை பொருந்திய பயிரவர் அமுதருந்தப் பெறுவதற்கு அவர் விரும்பியபடியே அமுதமைப்போம்; ஒரு குடிக்கு ஒருவனாய் வளரும் சிறுவனை எவ்வாறு பெறலாம்?" என்றுமட்டும் கேட்டாராம்!

"அரிய கற்பின் மனைவியார்
அவரை நோக்கி உரைசெய்வார்
பெரிய பயிரவத் தொண்டர்
அமுதுசெய்யப் பெறுவதற் கிங்கு
உரிய வகையா லமுதமைப்போம்
ஒருவனாகி ஒரு குடிக்கு
வருமச் சிறுவன்றனைப் பெறுமாறு
எவ்வா றென்று வணங்குதலும்"

சிவனடி மறவாத சிறுத்தொண்டர் நாதனடி மறவாத நங்கையை நோக்கி "மாநிதியம் கொடுத்து மகனொருவனை யாரிடமேனும் பெறலாமென்றாலும், தனயனைத் தாய்தந்தையரே அரிந்து தருபவர் கிடையாது! ஆதலால், அடியவருக்கு அமுதளித்து நாமுய்ய நமது புதல்வனையே அழைப்போம்" என்று உள்ளம் கலங்காமல் உரைத்துவிடவே, அந்நங்கை அதற்கும் இணங்கியவராய் "இனியொரு கணமும் தாழாமல் வைரவரை வரவழைத்து அமுதளித்து அவரது மலர்ந்த

முகம் கண்டு மகிழ்வோம்; நம்மைக் காக்கவரும் நற்றவ மணியை பள்ளியிலிருந்து அழைத்து வாருங்கள்" என்று மனம் பதறாமல் மொழிந்துவிட்டார்!

" இன்று தாழாது அமுதுசெய்யப்
பெற்றிங்கு அவர்த மலர்ந்தமுகம்
நன்று காண்பே மேன நயந்து
நம்மைக் காக்க வருமணியைச்
சென்று பள்ளியினிற் கொண்டு
வாரும் என்றார் திருவனையார்."

என்ன துணிவு! அடியவருக்கு அமுதளித்து அவரது மலர்ந்த முகம் கண்டு மகிழும் மங்கையின் மனம் பெற்ற பிள்ளையின் இரத்தம் கண்டு துடியாது போலும்! இவ்வரிய தொரு செயலை இருவரும் உவந்து செய்யத் துணிந்தது அடியவர் பொருட்டே ஆதலால், சிவனடியார் சிறப்பைப் பற்றிச் சிறிது இங்கு சொல்லவேண்டியது இன்றியமை யாததாகும்.



# சிவனடியார் சிறப்பு



"இருந்தோம்பி யில்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு."

என்பது வள்ளுவர் வாய்மொழி. இதனால் இருந்தோம்பி இல்வாழும் ஒருவனது முதன்மையான கடன் விருந்தோம்பி வேளாண்மை செய்தலே என்பது விளங்கும். கூழுக்குப் பாடிய கூனற்கிழவி "மருந்தேயாயினும் விருந்தோடுண்" என்று விருந்தின் பெருமையைச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தாள். "அமிர்தமே ஆனாலும் விருந்தோடிருந்தே அருந்தவேண்டும்" என்று தெய்வப்புலவராம் திருவள்ளுவரும் தெரிவிக்கின்றார். இவ்வாறு கூறிய வள்ளுவ வள்ளல் இன்னமும் "வைகலும் விருந்து பேணும் ஒருவன் வறுமை அடைந்து வருந்தான்" என்றும், "முகமலர்ந்து விருந்து போற்றும் ஒருவன் வீட்டில் திருமகள் அக மலர்ந்து உறைவாள்" என்றும் உரைக்கின்றார்.

"இம்மையில் விருந்தைப் பேணாதவன் அம்மையில் வருந்துவான்" என்றும், "பண்ணார்ந்த மொழிப் பாவையர் பக்கம் நின்று பாலடிசிலைப் பசும்பொன் கலத்தில் பரிமளிக்கப் பரிந்து உண்ணும்பொழுது பசித்தவர் முகத்தைப் பாராதவர் விரைவில் பொருளை இழந்து உண்ண உணவின்றி அண்ணாந்தேங்கி அலைந்துதிரிந்து சீரழிவர்" என்றும் அறநூல்கள் அறைகின்றன.

"மண்ணாற் சட்டி கரத்தேந்தி
மரநாய் கவ்வும் காலினராய்
அண்ணாந் தேங்கி யிருப்பவரை
அறிந்தோம்! அறிந்தோம்! அம்மம்ம!
பண்ணார் மொழியார் பாலடிசில்
பைம்பொற் கலத்தில் பரிந்தூட்ட
உண்ணா நின்ற போழ்தத்தே
உதவாமாந்த ரிவர்தாமே!"

என்பது சிந்தாமணிச் செய்யுளாகும். ஆனால் வந்த விருந்து பேணி வருவிருந்து பார்த்து வாழும் ஒருவன் வானத் தவருக்கு நல்விருந்தாகி நன்மை பெறுவான்.

"செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத்தவர்க்கு"

ஆகவே, விருந்தோம்பல் இருமையினும் பெருமைதரும் என்பது இவற்றால் இனிது விளங்கும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த விருந்தோம்பலுக்குத் தமிழ்மக்களே சிறந்த இலக்கியமாவர். வழிப்போக்கர் வந்து தங்குவதற்கெனவே வீட்டின் வெளிப் பக்கம் திண்ணையமைக்கும் வழக்கம் அன்றும் இன்றும் தமிழ் நாட்டில் நின்று நிலவுகின்றது. கோசலம் என்னும் கோதிலா நாட்டில் 'தம் தம் இல்லிருந்து விருந்தொடும்

தமரொடும் அமுத உண்டி அருந்தும்' காட்சியையே கவி யரசராம் கம்பர் கண்டார். இங்ஙனம் பண்டைத்தமிழ் மக்கள் விருந்துபோற்றிய முறையை இன்னும் பலவாறு விரிக்கில் மிகவும் பெருகும்.

விருந்து பேணும் திறத்தில் சிறந்து விளங்கிய தமிழ் மக்கள் வறுமை மிகுந்த ஏழை மக்களையும், சிறப்பு மிகுந்த சிவனடியாரையும் விருந்தினரில் சிறந்தவர் எனக் கருதினர். பசித்த உயிர்க்குப் பகுத்துக் கொடுத்துப் பல்லுயிரோம்பி நல்லறம் புரிவதே நூலோர் கூறும் நன்னெறி என நினைத் தனர். அன்னவர் வழக்கத்தை அக்காலத்துப் பாவலர் கூறும் முறையால் அறியலாம். "வறியார்க் கொன்றீவதே ஈகை" என்றும், "அடியார்க்கு அமுதிடலே சிறந்த அறம்" என்றும் பழந்தமிழ் நூல்கள் முழங்குகின்றன. அரனடி போற்றும் அடியவருக்குச் செய்வன யாவும் இறைவனுக் குச் செய்வனவாக முடியும் என்றும், ஆனால், இறைவ னுக்கு அளிக்கும் எதுவும் அடியவருக்கு அளித்ததாக ஆகாது என்றும் திருமூலர் தெரிவிக்கின்றார்.

"படமாடுங் கோயில் பரமற் கொன்றீயின்
நடமாடுங் கோயில் நம்பர்க் கங்காகா;
நடமாடுங் கோயில் நம்பர்க் கொன்றீயில்
படமாடுங் கோயில் பரமற்கங்காமே!"

இன்னமும், ஆயிரம் ஊர்களை அந்தணர்க்கு அளிப்பதினும், ஆயிரம் கோபுரம் கட்டிமுடிப்பதினும், பரமனடியார்க்கு ஒருபொழுது உணவளித்தல் பெரும் பலன்தரும் எனவும், ஏனையயாவும் அதற்கு இணையில எனவும் கலைவல்லார் கருது கின்றனர். அதனை அடியில் வரும் கவியில் அழுகுறக் காணலாம்.

> " அகர மாயிரம் அந்தணர்க் கீயிலென்?
> சிகர மாயிரஞ் செய்து முடிக்கிலென்?
> பகரு ஞானியின் பகலூண் பலத்துக்கு
> நிகரிலை யென்பது நிச்சயந்தானே! "

ஆகவே, இருவினையும் நீக்கும் அருமருந்தனைய திருமந்திரத் தில் அடியார்க்கு அமுதிடல் இவ்வளவு சிறந்ததாகக் கூறப் படுவதால், அடியாரது பெருமை எவ்வளவு சிறந்தது என் பது சொல்லாமலே விளங்கும். " தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே! " என்றார் ஔவையார். வழிபடும் தெய்வம் என்று வணங்கத்தக்க பெருமை வாய்ந்த சுந்தர மூர்த்தியே தன்னை " அடியார்க்கும் அடியேன் " என்று சொன்னாராயின் அடியவர் பெருமையை என்னென்று அறிவிப்பது?

இன்னமும், 'அன்பர் திருவுளம் கோயிலாகக் கொண்ட' ஆண்டவன் அடியவர் அகத்தில் அமர்ந்து

அற்புத நடனம் செய்து அருள் புரிவான். 'தேவர்கோ அறியாத தேவதேவன்' தொண்டர் மனமெனும் கமல மலரில் தாண்டவம் செய்வதோடு, தொண்டருக்காக எத்தகைய தொண்டையும் செய்வான். முன்னொரு சமயம், சுந்தரமூர்த்தி சொன்னதையெல்லாம் பத்திக்கு உவந்து பரிந்தருள் புரியும் பரமர் கேட்டார். 'பரவை மனையில் லன்று ஒருபொழுது தூது' சென்றார். ஆலக்கோயிலுக்கு அருகே ஆரூரர் பசியால் வருந்தியதை அறிந்து அக்கருணையங்கடல் அயலார் வீடுதோறும் இரந்து அன்னம் வாங்கி அவருக்கு அளித்து அருள் செய்தார். "திருவாசகம்" தந்த மணிவாசகர் பொருட்டு இறைவன் செய்த திருவிளையாடல் செப்பற்கரிய சிறப்பு வாய்ந்தது. அவருக்காக மதுரைமா நகரில் குதிரைச் சேவகனாக வந்தார்; வைகைக் கரையை அடைக்கச் சென்று மண் சுமந்து மன்னவனால் அடிபட்டுப் புண் சுமந்த பொன் மேனியானார். இங்ஙனம், அடியவருக்கு இறைவன் செய்த தொண்டுகள் இன்னும் பலவாகும்.

முன்னாளில், தாயினுமினிய தயாபரனது திருமுடியையும் திருவடியையும் காணும் பொருட்டு வேதனும் மாலும் அன்னமும் பன்றியுமாக முறையே மாறி மேலும் கீழும் சென்று தேடினார்கள். ஆனவரை அவர்கள் முயன்று பார்த்தும் அடியையும் முடியையும் காணமுடியவில்லை.

இன்னமும், "ஆகாயம் இங்கு அறிவோம்; அதனில் அண்டம் அடுக்கடுக்காய் அமைந்துள்ளது என்பதும் அறிவோம்; ஆங்கே உயர்வுறும் உடல் நிலையும் அறிவோம்; உடலை விட்டுப் பிரிந்த சீவன் உற்றநிலையும் அறிவோம்; ஆனால் அனைத்தும் நடத்தும் உனது அருள்விளையாட்டை அந்தோ! அறிந்திலோம்!" என்று மறைகளெல்லாம் முறையிடுகின்றன.

"அந்தர மிங்கறிவோம்; மற்றதனில் அண்டம்
அடுக்கடுக்காய் அமைந்த உளவறிவோம்; ஆங்கே
உந்துறும் பல்பிண்டநிலை அறிவோம்; சீவன்
உற்றநிலை அறிவோம்; மற்றனைத்தும் நாட்டும்
எந்தை நினது அருள் விளையாட்டு அந்தோ! அந்தோ!
எள்ளளவும் அறிந்திலோம்! என்னே! என்று
முந்தனந்த மறைகளேலாம் வழுத்த நின்ற
முழுமுதலே! அன்பர்குறை முடிக்குந் தேவே!"

இவ்வாறு, கமலமலரில் வாழும் நான்முகனும், 'கார்முகில் நிறத்துக் கண்ணனும் கண்ணுதற்கரிய' கண்ணுதற் பரமன் — மறையெலாம் முறையிட நின்ற இறைவன் — அண்டங்களுக்கெல்லாம் ஒரு தனி முதல்வனும் ஆண்டவன் மண்மேல் வந்து அடியவர் மனம்போல் நடந்து தொண்டுகள்செய்தனன் என்றால், அடியவர் பெருமையை

சிவனடியார் சிறப்பு.

அளவிட்டுச்சொல்லவும் முடியுமோ! எழுதவுங் கூடுமோ? வரையவும் மொழியுண்டோ?

ஆகவே, சொல்லற்கரிய சிறப்புவாய்ந்த அடியவருக்கு அமுதிடலையே சிறுத்தொண்டர் அரியவற்றுள் எல்லாம் அரியது எனக்கருதினார். தினம் அடியவர் வந்து தமது இல்லில் உண்டாலொழிய அவர் உண்ணார். சிவனடியாரைச் சிவன் எனவே சிந்தனை செய்தார்.

"தேசிகர் தம்மைச் சிவநேசர் தம்மையும்
ஈசனேனவே யுளத்துளேண்"

என்பது சைவ சமய நெறி. இறைவனடி மறவாத பெரியா ரனைவரும் இவ்வாறு கருதுவது இயல்பாகும்.

இன்பவடிவாம் இறைவனடியை இமைப்பொழுதும் மறவாத அடியவருக்கு அவ்விறைவன் இனிமைதரும் யாவினும் மிக இனியனாய் இலங்குவான். அருட் பெருங் கருணை அண்ணலிடம் அளவிடலரிய அன்பு செலுத்தும் தொண்டருக்குப் பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும் கேட்டாலும் அத்தனைக்கும் தித்திக்கும் இனித்த சுவைக் கரும்பாய் அமைவான்.

"தினைத்தனை யுள்ளதோர்
பூவினில் தேன் உண்ணாதே
நினைத்தோறுங் காண்டோறும்
பேசுந் தோறும் எப்போதும்

அனைத்தெலும் புள் நெக
ஆனந்தத் தேன் சொரியுங்
குனிப் புடையானுக்கே
சென்றூதாய் கோத்தும்பீ !"

"*அரசவண்டே! தினையளவு உள்ளதொரு மலரின் தேனை உண்ணாமல், எண்ணுந்தொறும், காணுந்தொறும், பேசுந்தொறும் எப்போதும் எலும்புகள் எல்லாம் நெகிழும் படி பேரின்பத் தேன் பொழியும் ஆடலுடையான் அடிமலரடைந்து ஊதுவாயாக" என்பது மணிவாசகர் திருவாசகம். 'வன்மை செய்திடும் வறுமை வந்தாலும், மகிழ்வுசெய்திடும் வாழ்வு வந்தாலும்' நன்மையளிக்கும் நாதனடியை மறவாத நாவுக்கரசர்,*

"கனியினும் கட்டிபட்ட கரும்பினும்
பனி மலர்க் குழற் பாவை நல்லாரினும்
தனிமுடி கவித்தாளும் அரசினும்
இனியன் தன்னடைந்தார்க்கிடைமருதனே"

*என்று மொழிகின்றார். அருள் கனிந்தொழுகும் அருட்பா என்னும் அமுதம் அளித்த அருட் பிரகாச வள்ளலார்,*

தனித்தனி முக்கனி பிழிந்து வடித்தொன்றாக் கூட்டிச்
சர்க்கரையுங் கற்கண்டின் பொடியு மிகக்கலந்தே
தனித்த நறுந்தேன் பெய்து பசும்பாலுந் தேங்கின்
தனிப்பாலுஞ் சேர்த்தொருதீம் பருப்பிடியும் விரவி

இனித்த நறுநெய்யனைந்தே இளஞ்சூட்டினிறக்கி
எடுத்த சுவைக் கட்டியினு மினித்திடுந் தெள்ளமுதே!

என்றுரைக்கின்றார். இங்ஙனம் இனியனாய் விளங்கும் இறைவனைப்போல் என்றும் இனிமை தரும் இனியவர் இவ்வுலகில் வேறு ஒருவரும் இல்லை.

"உற்றார் ஆருளரோ? — உயிர்
கொண்டு போம் பொழுது
குற்றாலத் துறைக் கூத்தனல்லால்
நமக்கு உற்றார் ஆருளரோ?"

என்றபடி, உற்றார் உறவினர் யாவரும் உயிர்போம்பொழுது உதவார். ஆனால், இறைவன் ஒருவனே உயிருக்குயிராய் நின்று அருள்செய்து இகத்தும் பரத்தும் இன்பந்தருவான். ஆதலால், உண்மையறிவுடைய உயர்ந்தோரனைவரும் இறைவன் ஒருவனே இனியவனாவான் எனத் தெளிந்து அவனிடம் இடைவிடாது அன்பு செய்து இல்லறத்தில் இருப்பினும் தாமரையில் தங்கி இருக்கும் தண்ணீர்போல் தரித்து இருப்பார்கள். உரிய மனைவி மைந்தரிடம் ஒருவித பற்று மின்றி "யாவும் இறைவனுக்கே உரிமை" எனக் கருதி உய்வார்கள்.

ஆகவே, பலகலையும் பழுதறப் பயின்று பண்பெலாம் நிறைந்து சிறந்து விளங்கிய சிறுத்தொண்டர் இறைவனே

இனியவன் எனத் தெளிந்தார். சிவனடியாரைச் சிவன் எனவே கண்டார். அடியார்க்கு அமுதிடலே அரிய பிறவியின் உயரிய பயன் எனக் கொண்டார். அடியவரிடம் செல்லும் அன்பால் விழுங்கப்பட்ட மனதை அவர் பெற்றார். தமக்குரிய எதனையும் தாம் அனுபவித்து இன்பம் அடைவதைவிட, அடியவருக்கே கொடுத்து அவர் அனுபவித்து மகிழ்வதைக் கண்டு மகிழ்வதே அளவில் இன்பம் அளிப்பதாகும் என்று எண்ணினார்.

எனவே, நடுப்பகலில் பயிரவர் வந்து நாவு கூசாமல் "நரபசுவையே நாமுண்போம்." என்று நவின்றதைக்கேட்டும் அவர் நடுங்கவில்லை. "புண்செய் நோயில் வேலெறிந்தாற் போலும் புகல்வது இன்னம் ஒன்று உண்டு" என்று பகர்ந்தது கேட்டும் பதறவில்லை. "பெற்றதாய் பிள்ளையைப் பிடிக்கவேண்டும்! பிதா மனமுவந்து வெட்டவேண்டும்!" என்றதைக் கேட்டும் பயந்தாரில்லை. "இல்லில் உள்ள எல்லாப் பொருளும் இறைவனடியார்க்கே உரிமையாகும்" என்னும் முடிவுடன் "எதுவும் செய்யலாம்!" என்று சொல்லுவாராயினர்.



# திருவெண்காட்டு நங்கை

சிவனடியே சிந்தை செய்யும் சிறுத்தொண்டருக்கு வாழ்க்கைத் துணைவியாய் வாய்த்த திருவெண்காட்டு நங்கை சிறந்த குணங்கள் பலவும் பொருந்தியவள். 'அன்னை தயையும் அடியாள் பணியும் பொன்னின் அழகும் புவிப்பொறையும்' பெற்றவள். கற்பிலும் பொற்பிலும் ஒப்புயர்வற்றவள். கனவிலும் நனவிலும் கணவனையே தெய்வமெனக் கருதுவாள். 'கற்பெனப் படுவது சொற்றிறம்பாமை' என்பதைக் கருத்திலிருத்திக் கணவன் குறித்ததைக் கூறுமுன்னரே கருத்தறிந்து நடப்பாள்.

"தாதை தன்னினும் தன்னயர் தம்மினும்
மாதர் மென்மொழி மைந்தர்கள் தம்மினும்
கோதில் கற்புடையார் தங்கொழுநர்பாற்
காதல் கூர்ந்து களிமகிழ் வெய்துவார்."

என்னும் மெய்ம்மைக்குச் சான்றானவள். அன்பும் இன்சொல்லும் அமையப்பெற்றவள். விருந்தோம்புந்திறத்தில் மிகவும் சிறந்தவள்.

காமனும் நாணும் கட்டழகுவாய்ந்த சீதையின் குணத்தையும் அழகையும் கவியரசராம் கம்பர் வியந்து நயந்து கூறுங்கால்,

"குணங்களை யென் கூறுவது?
கோம்பினைச் சேர்ந்தவை யுய்யப்

பிணங்குவன; அழகு இவளைத்
தவஞ்செய்து பெற்றதுகாண்."

என்று நயமுறக் கூறுவாராயினர். இக்கவியில் உயிரற்ற பொருளை உயிருள்ள பொருளாகக் கம்பர் உரைக்கின்றார். சிறந்த குணங்கள் எல்லாம் "யாரைச் சேர்ந்தால் சிறப்புறலாம்?" என்று சிந்தனை செய்து "உத்தமியாம் சீதையைச் சேர்ந்து உய்வோம்" என்று நாடித்தேடி அவைகளே ஆவலுடன் சீதையை வந்தடைந்தனவாம்! அங்ஙனமே அழகு அளவில் காலம் தவம்செய்து சீதையைப்பெற்றதாம்! இவ்வாறு ருசு வாது யாதும் அறியாச் சீதையை அழகு தவம் செய்து பெற்றதுபோல், திருவெண்காட்டு நங்கையை விருந்து தவம் செய்து பெற்றது என்று சொல்லிவிடலாம்.

இன்னமும், மிதிலை நாட்டு மங்கைக்கும் திருவெண்காட்டு நங்கைக்கும் விருந்தோம்பலில் சிறந்த ஒற்றுமை உண்டு. அருமைக் கணவனைப்பிரிந்து ஆருயிர் சோர்ந்து அசோகவனத்தில் வருந்தி இருந்த சீதை தன்னல மறந்து தலைவனை நினைந்து தவித்தாள். "அருந்நும் அன்னத்தை யாரிட அருந்துவார்? விருந்தினரைக் கண்டபோது அவர் என்ன செய்வார்?" என்றெல்லாம் எண்ணி மனம் புண்ணாகி நொந்தாள்.

"அருந்தும் மெல்லடகு யாரிட
அருந்தும்! என்றழுங்கும்!

விருந்து கண்ட போது
என்னுறுமோ! என்று விம்மும்!"

அசோக வனத்தில் அன்ன ஆகாரமின்றி வருந்தி இருந்த நிலையிலுங்கூட, "தன் பிரிவால் இராமன் திருமேனி மெலியுமே! அருந்தும் மெல்லடகு யாரிட அவர் அருந்துவார்! விருந்து பேண அங்கு ஒருவரும் இல்லையே! அவர் என்ன செய்வாரோ! அறியேனே!" என்று நினைந்து விம்மியழுதாள் என்றால், அந்நங்கையின் விருந்தோம்பும் ஆர்வத்தை யாரே அளவிட்டு அறியவல்லார்? இவ்வாறே அக்காலத்து மங்கையர் பலரும் விருந்தோம்பலிற் சிறந்து விளங்கினர்கள். கற்பிற்குக்கனியாய் கண்ணகி,

"அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்
துறவோர்க் கெதிர்தலுந் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் இழந்த வென்னை"

என்று கூறும் முறையில் விருந்தெதிர் கோடலை இழந்ததை நினைந்து வருந்துகின்றாள். இங்ஙனம், விருந்தோம்பலிற் சிறந்து விளங்கிய பெண்கள் வரிசையில் திருவெண்காட்டு நங்கை முதலிடம் பெற்றவள். விருந்தோம்புந் திறமையில் அம்மங்கையைப்போன்ற வேறொரு மங்கை அக்காலத்தும் இக்காலத்தும் இல்லை என்று சொன்னாலும் மிகையாகாது.

ஆகவே, தனக்கிணையில்லாத் தனிப்பெரும் குணம் வாய்ந்த திருவெண்காட்டு நங்கை — தூற்றும் பெண்டிரைக்

கூற்றெனை வெறுக்கும் திருவெண்காட்டுநங்கை தன்னாயகன் வந்து சொன்னதைத் தடுத்துரைக்கத் துணியாமல் "தவ முயன்று அரிதில் பெற்ற தனி இளங்குமரனை எவ்வாறு பிரிவது?" என்றும் நயங்காமல் — "சீராட்டிப் பாராட்டி ஐந்தாண்டளவும் செல்வமாய் வளர்த்த சீராளனை மனம் நோவாமல் அரிந்து கறி சமைப்பதா?" எனவும் சிந்தியாமல் "நம்மைக் காக்கவரும் நற்றவப் பாலனைப் பள்ளியிலிருந்து அழைத்து வாருங்கள்" என்று நாயகனிடம் தெரிவித்தாள்.

இதுவரையிலும் சீராளன் இவர்கள் அருகில் இல்லை; பள்ளியில் இருக்கிறான். அவன் வந்ததும் அச்செல்வ மகனைக் கண்ட பின்னாவது அவர்கள் மனம் மாறுபடுகிறதா? இல்லையா? என்பதை இனிமேல் கவனிப்போம்.



# கறியமுது சமைத்தல்

சிவத்தொண்டிற் சிறந்த சிறுத்தொண்டர் சிறுவனை அழைக்கப் பள்ளிக்குச் சென்றார். பிள்ளைக் கனியமுதாய்— பேசும் பொற்சித்திரமாய் விளங்கிய பாலன் அள்ளி அணைந்திட அவர்முன் விரைந்தோடி வந்தான். எதிரே வந்து தழுவிய மைந்தனை இருகையாலும் வாரி எடுத்தார். மீண்டும் இல்லம் வந்து மனைவி கையில் மகனைக் கொடுத்தார். அம்மையாரும் மைந்தனை வாங்கி குஞ்சி திருத்தி முகம் துடைத்து திருமஞ்சனமாட்டி அழகுசெய்து கணவரிடம் கொடுத்தார். அதனை, அருந்தமிழ் வல்ல சேக்கிழார் "எஞ்சலில்லாக் கோலஞ்செய்து எடுத்துக் கணவர் கைக் கொடுத்தார்" என்று பரிவுடன் கூறுகின்றார்.

அவ்வமயம், இயற்கை அழகு வாய்ந்த சீராளன் செயற்கை அழகாலும் சிறந்து விளங்கினான். கதிரவன் ஒளிபோல் மின்னும் வடிவுடன் கட்டிளங்குமரன் நின்ற காட்சி கண்டவர் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும். கமல மலர்போல் விளங்கும் ஒப்புயர்வற்ற அற்புத முகத்தைக் கண்டவரனைவரும் கோடி முத்தம் கொடுப்பதற்குக் காதல் கொள்வர். ஆனால், சிவனடியாரைச் சிவமென வழிபடும் சிறுத்தொண்டரும் அவரது மனைவியாரும் அடியவருக்குக் கறியமுதாகும் அருந்தவப் பாலனை உச்சிமோந்து மைந்தனுக்கு முத்தம் கொடுத்தால் எச்சில் ஆகும் என்று அச்சம் கொண்டனர்.

"அச்ச மெய்திக் கறியமுதாம்
என்னு மதனுல் அரும் புதல்வன்
உச்சிமோவார்; மார்பின் கண்
அணைத்து முத்தந் தாமுண்ணுர்."

இவ்வாறு பயத்தோடும், பக்தியோடும் இருவரும் ஒரு மனப்பட்டு "உலகறியார்" எனக்கருதி மைந்தனுடன் மறைவான தொரு அறையிற் சென்றனர். காதல் மகனைப் பெற்ற தாய் வேண்டும் கலங்களை விளக்கிக்கொண்டு வந்தாள். கொஞ்சமேனும் கூசாமல் — மனமும் கலங்காமல் தந்தையார் மைந்தன் தலையைப் பிடித்துக்கொண்டார்! ஐயிரண்டு திங்களாய் அங்கமெலாம் நொந்து பெற்ற அன்னை அருகில் அமர்ந்து அவனது கிங்கிணிக்கால்கள் இரண்டையும் மடிமேல் வைத்தாள்; கனிவாய் மைந்தன் கைகளிரண்டையும் தன் கையால் பிடித்துக்கொண்டாள்! பாவம்! அறியாச் சிறுவனும் சீராளன் "தாயும் தந்தையும் தன்னுடன் கொஞ்சிக் குலாவிக் களிக்கின்றார்" என்று கருதி சிவந்த வாயைத் திறந்து முறுவல் செய்தான்! அவனது 'புன் முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயும்' அவர்களை மயக்கிவிடவில்லை! தாய் பிடிக்க — பையன் நகை செய்ய — தந்தையார் சிந்தை கலங்காமல் சிறுவன் தலையை வாளால் அரிந்துவிட்டார்!

ஒன்று மனத்தார் இருவர்களும் உலகறியார் என மறைவிற்
சென்று புக்குப் பிள்ளைதனைப் பெற்ற தாயார் செழுங்கலங்கள்
நன்று கழுவிக் கொடு செல்ல நல்ல மகனை யெடுத்துலகை
வென்ற தாதையார் தலையைப் பிடிக்க விரைந்து மெய்த்தாயர்
இனிய மழலைக் கிங்கிணிக்கால் இரண்டு மடியின் புடையிடுக்கிக்
கனிவாய் மைந்தன் கையிரண்டுங் கையாற் பிடிக்கக் காதலனு(ம்)
நனி நீடுவகை யுறுகின்றார் என்று மகிழ்ந்து நகைசெய்யத்
தனிமா மகனைத் தாதையார் கருவி கொண்டு தலையரிவார்."

*அந்தோ! பரிதாபம்! அருமைக்கு ஒருமகனாய் விளங்கிய சீராளன் தலையை அரிவதற்குச் சிறுத்தொண்டர் கையும் தடுமாறவில்லை! மனமும் பதறவில்லை! தான் பெற்ற பிள்ளையைத் தன்னெதிரே வைத்துத் தலையரிவது கண்டும் தாயானவள் தடுக்கவில்லை! கண்ணாரக் கண்டு சகிக்க முடியாத கோரக் காட்சியை அவளும் கண்டு சகித்தாள்! அதுவுமல்லாமல், "அருமைப் பாலன் உயிரை அளித்து அரிய உதவி செய்தான்!" என்று கருதித் தாயும் தந்தையும் அகமும் முகமும் மிகவும் மலர்ந்து அந்தமில் இன்பம் அடைந்தனராம்!*

"அருமை யுயிரை யெனக் களித்தான்
என்று மிகவு மகமலர
இருவர் மனமும் பேருவகை
எய்தி அரியவினை செய்வார்!"

இங்ஙனம், அரிய வினையை இருவரும் மனமுவந்து செய்த பின்னர், திருவெண்காட்டு நங்கை அறுத்த தலை அமுதுக்கு ஆகாது எனக் கழித்தாள். அதனை மறைத்து நீக்கச் சந்தனமங்கையிடம் கொடுத்தாள். ஏனைய உறுப்பெல்லாம் கொத்தி அறுத்தாள். கறிக்கு வேண்டும் பல காயம் அரைத்தாள். விரைந்து கறி சமைத்தாள். ஐயோ! பாவம்! அருமைப் பிள்ளையின் உடல் வெந்து துடிக்கின்றது! அதுவும் கண்டு அன்னையின் மனம் நொந்து துடிக்கவில்லை!



# இரண்டாம் பகுதி



## மக்கட்பேறு

இவ்வுலகில், ஒருவன் பெறுவனவற்றுள் மக்கட் பேறே மிகவும் சிறப்பு வாய்ந்தது. உண்மைச் செல்வமென உரைக்கத்தக்கது மக்கட் செல்வமே என்று உயர்ந்தோர் உரைப்பர். "தம்பொருள் என்ப தம்மக்கள்" என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவதேவரும் தெரிவிக் கின்றார்.

இன்னமும், குழந்தை அளைந்த கூழை உண்டலே வாய்க்கு இன்பம் என்றும், மக்கள் மெய் தீண்டலே மெய்க்கு இன்பம் என்றும், அவர் சொற்கேட்டலே செவிக்கு இன்பம் என்றும் செந்நாப்போதார் சொல்லுவா ராயினர்.

> "குழலினிது யாழினி தென்ப தம்மக்கள்
> மழலைச் சொற் கேளாதவர்."

என்னும் பொதுமறைப்படி, தமது மக்கள் மழலை மொழி யைக் கேளாதவரே குழல் இசையும், யாழ் இசையும் செவிக்கு இன்பம் தருவன என்று சொல்லுவார்கள்.

இசையினுமினிய மழலைச் சொல்லைக் கேட்பவர் அனைவரும் அளவிடலரிய இன்பம்அடைவார்கள். வெளியிற் சென்று வேலை செய்து மாலை வேளையில் மிகவும் களைத்து வீடு திரும்பும் தந்தையின் முகம் மைந்தனைக்கண்ட அளவில் கதிரவனைக் கண்ட கமல மலரேபோல் மலர்ந்து விடுவது இயல்பாகும். மழலை பேசும் மகவின் மொழியைக் கேட்ட தும் அவனது தீராத களைப்பும் தீர்ந்துவிடும். மாறுத

கவலையும் மறைந்துவிடும். பசியும் பறந்துவிடும். மைந்தனை எடுத்து மார்பில் அணைப்பான். "கரும்பே! தேனே! முத்தே!" எனக்கொஞ்சுவான். அடுத்து வருவாள் அன்னை. "திருவே! என் செல்வமே!" என ஆசை ததும்பச் சொல்லுவாள். கன்னம் சிவக்க முத்தம் கொடுத்துச் சித்தம் மகிழ்வாள். இவ்வாறு மக்களைத் தழுவியும் அவர்தம் மொழிகளைக்கேட்டும் பெற்றோர் மகிழ்வர்.

ஆனால், கொஞ்சிக் குலாவிக் களிப்பதற்கு மக்களைப் பெறாத ஒருவன் பெரிதும் வருந்துகின்றான். உண்ணுவது கூழே ஆயினும், "உடனிருந்து உண்ணுவதற்கு மகவில்லையே!" என உளைகின்றான். அறம்பல புரிந்து தவம்பல செய்கின்றான். காசியை அடைந்து ஈசனை நினைந்து பூசனை செய்து வழிபடுகின்றான். மைந்தரிலா மனை வாழ்க்கை இன்பம் பயவாது என்று அறிஞர் பலரும் கருதுகின்றனர். "கண்ணிலா யாக்கையும், மதியிலா வானமும், அருளிலா நெஞ்சும், புலவரிலா அவையும், மைந்தரிலா மனையும் ஒப்பாகும்" என்று கவிஞர் ஒருவர் கூறுகின்றார். "சிறையிலா நகரம்போலும் சேயிலாச் செல்வம்" என்பதும் இங்கு சிந்திக்கத்தக்கது "மகிழ்ச்சி தரும் மக்களைப்பெறாதவர் பொன்னுடையரேனும் புகழுடையரேனும் இன்னும் என்னுடையரேனும் உடையவராகார்" என்பது புலமை மிகுந்த புகழேந்தியின் பொன்னுரையாகும். ஆகவே, மக்கட்பேறே மிகச்சிறந்தது என்பதும், மைந்தரில்லா மனைவாழ்வில் இன்பம் இல்லை என்பதும் இவற்றால் விளங்கும்.

# தசரதன்

மன்னுயிரை எல்லாம் தன்னுயிரென மதித்து வாழ்ந்த தசரத மன்னன் மக்கட்பேறின்றி மனமிக மெலிந்தான். அருந்தவ முனிவரைக்கொணர்ந்து பெருந்தவம் புரிந்தான். வேண்டுவார் வேண்டுவதை வழங்கும் விமலன் அருளால் புதல்வர் நால்வரைப்பெற்று, இராமன், இலக்குவன், பரதன், சத்துருக்கன் என முறையே பெயரிட்டுப்போற்றி வளர்த்தான். அந்நால்வரில் இராமன் அறிவால்-ஆற்றலால் சிறந்தவன். உத்தம குணங்களுக்கெல்லாம் உறைவிடமானவன். "என்ன நோன்பு நோற்றாள் கொல் இவனைப் பெற்ற வயிறுடையாள்? என்னும் வார்த்தை எய்துவித்த இருடிகேசா!" என்று புகழப்பெற்றவன். "இனியிம் மன்னுயிர்க்கு இராமனிற் சிறந்தவரில்லை" என்று எவரும் போற்றும் பெருமைக்கு உரிமையானவன். இத்தகைய சிறப்பமைந்த இராமன் தசரதனுக்கு இன்னுயிராய் இலங்கினான். 'கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும்' களிப்பாய் விளங்கிய கோதண்ட வீரனைக் காவலன் கண்ணும் ஆவியுமாகக் கருதிவளர்த்தான்.

ஒரு நாள், அருந்தவ முனிவராம் விசுவாமித்திரர் அன்னையினும் சிறந்த அன்புகாட்டும் அரசனிடம் "தருவனத்தில் யான் இயற்றும் தவவேள்விக்கு இடையூறு செய்யும் நிருதரை அழிக்க இராமனைத் தருவாய்" எனக் கேட்டார். அன்று அவர் கேட்டு நின்றதைக் கவியரசராம் கம்பர் மிகவும் அழகாகக் கூறுகின்றார். "கரிய செம்மல் ஒருவனைத்தந்திடுதி என உயிர் இரக்கும் கொடும் கூற்றின் உளையச்சொன்னான்" என்று நயம்பட எழுதிப் போந்தார். இராமனே தசரதனுக்கு இன்னுயிர். உயிர் வாங்க வரும் எமன் அதனை வாங்காமல் அவ்விடம்விட்டு அகலான்.

அதுவேபோல், "இராமனை விரும்பிய முனிவரும் அவனைப் பெறுமல் அவ்விடம் விட்டு அகலார்" என்பதைக் குறிப்பிட எண்ணிய கம்பர் உயிர் இரக்கும் கொடும் கூற்றை இராமனை இரக்கும் முனிவருக்கு உவமையாக உரைத்தனர்.

அருந்தவ முனிவர் அவ்வாறு கூறியதும் அரசன் அடைந்த துன்பத்திற்கு அளவே இல்லை. "கரிய செம் மலைத் தந்திடுதி" என்று கூறிய சொற்கள் கூரிய வேலைப் போன்று வேந்தன் காதில் விழுந்தன. "வீரன் மார்பில் வேல் பாய்ந்த புண்ணில் அமைந்திருந்த பெரும் புழையில் நெருப்பு நுழைந்ததுபோல் புகுந்தது" என்று கம்பர் கூறு கின்றார். இங்ஙனம், நெருப்பு நுழைந்ததுபோல் நுழைந்த தும் அரசன் துயரக்கடலில் ஆழ்ந்தான். உள்ளத் தில் பெருகிய துன்பவெள்ளம் அவனது ஆருயிரை வெளியே தள்ளியது. அவ்வுயிர் (உடலினின்று வெளிப்படும் காலம் வாராமையால்) உடலைவிட்டுப் பிரிய முடியாமல் மீண்டும் உள்ளே புகுந்தது. இவ்வண்ணம் மன்னன் இன்னுயிர் போவதும் வருவதுமாகி ஊஞ்சல்போல் அலைவதாயிற்று.

அவ்வமயம், புவிவேந்தன் அனுபவித்த துன்பத்தை விரித்துரைத்து விளக்க வந்த கவிவேந்தர் "பிறக்கும் பொழுது கண்களைப் பெறாத ஒருவன் இடையில் கண்களைப் பெற்று மீண்டும் இழந்தானாயின் அவன் எத்தகைய துன் பத்தை அனுபவிப்பானோ அத்தகைய துன்பத்தை அயோத்தி வேந்தன் அனுபவித்தான்" என்று கூறுவா ராயினர். கண்ணில்லாத பிறவிக்குருடன் இடையில் கண் களைப்பெற்றால், "கண்டறியாதன கண்டேன்" எனக் களிப்பான். கண்களைக் கவரும் பொருள்களைக்கண்டு என் றும் அறியாத இன்பம் பெற்று எல்லையில்லா மகிழ்வடை

வான். அந்நிலையில், மீண்டும் கண்களை இழந்தானேல், 'காண்படு கண்ணியில் மாண்படுமாறு' கலங்கி ஒருவரானும் அளவிட்டு அறிய முடியாத துன்பத்தை அடைவான். "அருமைத் திருமகனைத் தருவாய்" எனக்கேட்ட அளவில் அயோத்தி வேந்தனும் அவ்வளவு துன்பத்தை அநுபவித்தான்.

"எண்ணிலா அருந்தவத்தோன் இயம்பிய சொல்
மருமத்தின் எறிவேல் பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையில் கனல் நுழைந்தாலெனச்
செவியிற் புகுதலோடும்
உண்ணிலாவிய துயரம் பிடித்து உந்த
ஆருயிர் நின்று ஊசலாடக்
கண்ணிலான் பெற்று இழந்தான் என உழந்தான்
கடுந்துயரங் கால வேலான்."

எண்ணிலா அருந்தவத்தோன் என்பதை எண் இல்லாத எனக்கொண்டு, அளவிறந்த அருந்தவத்தோன் என்று ஒரு பொருளும், எண்ணுதல் இலாத எனவும் கொண்டு (தன் எண்ணத்தைத் தெரிவித்தால் தயரதன் அடையும் துன்பத்தை) எண்ணிப்பாராத அருந்தவத்தோன் என்று இன்னொரு பொருளும் இயம்பலாம். இவ்வாறு எண்ணிலா என்னும் சொல்லை இருபொருள் கொள்ளும் வண்ணம் இக்கவியில் அமைத்திருப்பது கற்பவர் மனதைக் கவர்வதாகும். இன்னமும், இவ்வொரு சிறுகவியில் மூன்று அழகிய உவமைகள் இருப்பது கம்பர் கவியின் சிறப்புக்கு ஒரு சான்றாகும்.

ஆகவே, சிந்தைக்கினிய செல்வ மைந்தனைச் சிறிது காலம் பிரிவதற்கு ஆற்றாத காவலன் கடுந்துயரம்

கொண்டான். அவ்வமயம், வசிட்டர் எழுந்து தசரதனுக்குத் தக்கவாறு தேர்தல்கூறி "மைந்தனை அனுப்புக" என மொழிந்தார். குருவின் வாசகம் கேட்ட கொற்றவன் திருவின் கேள்வனைக்கொணர்ந்து இளவலுடன் முனிவரிடம் அடைக்கலமாகக் கொடுத்தான். 'மன்னன் இன்னுயிர் வழிக்கொண்டாலென' இராமனும் இலக்குவனும் முனிவருடன் தொடர்ந்து 'பொன்னின் மாநகர்ப்புரிசை' நீங்கினர். இங்ஙனம் சென்ற பாலராமனைச் சிறிதுகாலம் சென்றபின் மிதிலையம்பதியில் கல்யாணராமனாகக் காவலன் கண்டு களிபேருவகை கொண்டான்.

சில நாட்கள் சென்றன. மன்னுயிர்க்கு உறுவதே செய்து வைகிய மன்னவன் தன்னுயிர்க்கு உறுவதும் செய்ய எண்ணினான். தள்ளரும் பகையெலாம் தவிர்த்து நின்ற தயரதன் காமமாதியாம் உள்ளுறை பகைஞரை ஒழிக்கக் கருதினான். மிதிலையில் திருமகள் மணவினை கண்டு மகிழ்ந்த மன்னன் மகனுக்கு மணிமுடி சூட்டி பூமகள் மணமும் கண்டு மகிழக் காதல்கொண்டான். பண்புமிக்க பெரியவர் பலரை அழைத்து "அருமைத் திருமகனும் இராமனுக்கு அரசை நல்கி, யான் வனம் நண்ணித் தவம் செய்ய நினைக்கின்றேன்; உங்கள் கருத்தை உரையுங்கள்" என்று உரைசெய்தான். அவரும் இணங்கினர். அயோத்தி நகரமெங்கும் அலங்கரிக்கப்பட்டது. "மறுதினம் இராமனுக்கு முடி சூட்டப்படும்" என்னும் மங்கலவொலி அங்கிங்கெனாதபடி எங்கும் பரவியது.

அந்நிலையில், நிலத்தியல்பால் நீர் திரிவதுபோல், கூனியின் உறவால் கைகேசியின் அறிவு திரிவதாயிற்று. தன் மாளிகை நோக்கிவந்த தசரதனிடம் "முன்னர் தருவதாக

வாக்களித்த வரங்கள் இரண்டையும் தருக" எனக் கேட்டாள். அக்கள்ளியின் உள்ள நிலையை உணராத மன்னன் "தந்தேன்" என்று உரைத்தான். உடனே, கேகயமாது மன்னவனிடம் மனம் கூசாமல் "பரதனே நாடாளவேண்டும்; இராமன் கானகம் சென்று பதினாலாண்டு கழித்து வரவேண்டும்" எனப் புகன்று நின்றாள். அதனைக் கேட்டதும் தசரதன் அடியற்ற நெடுமரம்போல் தரையில் விழுந்து, அனலில் இட்ட மெழுகென உருகித்துடித்து அயர்ந்தான். மைந்தனலாது உயிர் வேறிலாத மன்னன் சிந்தைநொந்து திகைத்தயர்ந்து மண்ணில் விழுந்து கண்ணீர்விட்டுக் கதறினான். கொல்லன் உலையில் கொழுந்துவிட்டு எரியும் கனலே போல் வெந்து வெந்து வெய்துயிர்த்தான். அவ்வமயம், அவன் அனுபவித்த துன்பத்தை யாவர் சொல்ல வல்லார்? என்று எல்லாம் சொல்ல வல்ல கம்பரே கூறுகின்றார்.

"பூதலமுற்று அதனிற் புரண்ட மன்னன்
மாதுயரத்தினை யாவர் சொல்லவல்லார்?
வேதனை முற்றிட வெந்து வெந்து கொல்லன்
ஊதுலையிற் கனலென்ன வெய்துயிர்த்தான்"

இவ்வாறு புரண்டழுது மீண்டும் எழுந்து "பெண்ணே! வண்மைக் கேகயன் மானே! பெறுவாயேல், மண்ணே கொள்நீ; மற்றையதொன்றும் மற" என்று நயந்து வேண்டினான். பாவம்! அவள் அடியினும் விழுந்து தொழுதான்; அழுதான். பலமுறை முயன்றான் பயன்படவில்லை. ஆவிசோர்ந்து அயர்ந்தான். மைந்தனை நினைந்து குழைந்து மெலிந்து மயங்கி விழுந்தான்.

கொஞ்சமும் இரக்கமற்ற கைகேசி கோதண்டவீரனை அழைத்தாள். அந்திவந்தடைந்த தாயைக் கண்ட ஆன்

கன்றுபோல அவனும் வந்தான். பாதம் பணிந்து வாய் புதைத்து நின்றான். நஞ்சினும் கொடிய கைகேசி "நாயகன் உரையான் வாயால்; நானிது பகர்வேன்" என்று நவின்றாள். "ஆழிசூழ் உலகெலாம் பரதனே ஆளவேண்டும் என்றும், நீ ஏழிரண்டாண்டு வனத்திடைக் கழித்து வரவேண்டும் என்றும் மன்னவன் பணித்துள்ளான்" என்று 'தாயென நினைவான் முன்னே கூற்றென' நின்ற கொடியவள் கூறினாள். தாயிட்ட பணியைத் தலைமேற்கொண்ட இராமன் தன்னருமைத் தந்தை அயர்ந்துகிடந்த திசை நோக்கித் தொழுதான். தன்னுடன் தொடர்ந்த தம்பியையும், தேவியையும் அழைத்துக்கொண்டு வனம் சென்றான். கோதண்டவீரன் பிரிவுக்காற்றாத கோசலை மக்கள் கரமிழந்த கரியைப்போல் கடுந்துயருழந்தனர். அயோத்தி மக்கள் அனைவரும் அவ்வீரனோடு சென்று நகர்ப்புறத்தே தங்கி அன்றிரவு கண் துயின்றனர். அன்புடன் வந்து தன்னுடன் துயிலும் மக்கள் அறியாவண்ணம், இராமபிரான் தம்பியோடும் தேவியோடும் நள்ளிரவில் கல்லும் முள்ளும் அடர்ந்த காட்டில் நெடுந்தூரம் நடந்து சென்றான். காலையில் கண்விழித்த கோசலை மக்கள் இராமனைக்காணாது கலங்கி அழுது கண்ணீர்விட்டுக் கதறினார்கள்.

தேர் கொண்டு சென்ற சுமந்திரன் தாரைதாரையாய் வடியும் கண்ணீருடன் திரும்பினான். 'அருவிபாய் கண்ணோடும் அழிவுற்ற சிந்தையோடும்' வந்த சுமந்திரன் முனிவனுடன் மன்னன் மயங்கிக்கிடந்த மாளிகை அடைந்தான். "சுமந்திரன் வந்தான்" என்னும் சொல் மன்னன் செவியில் நுழைந்தது. "இரதம் வந்தமையால் இராமனும் வந்திருக்கலாம்" என்று கருதிய காவலன் மயக்கம் தெளிந்து கண் விழித்தான். 'விரத மாதவனைக் கண்டான்; வீரன்

வந்தனனோ? என்றான்.' இராமன் வரவில்லை என்றுரைக்க இயலாமல் முனிவன் ஏங்கி நின்றான். அவனது அகத்தில் நிகழ்ந்த கருத்தை மன்னன் அவன் முகத்தில் தோர்ந்த குறிப்பால் அறிந்தான். மைந்தன் வரவில்லை என்று தெளிந்து மீண்டும் மயக்கம் கொண்டான். "மைந்தனைக் காணாத மன்னன் மரணமடைவான்" என்று முனிவன் முடிவு செய்தான். உடல் துடித்துப் பதறிக் கதறி உயிர்விடும் பரிதாபக் காட்சியைக் கண்ணாரக் காணச்சகியாமல் அவ்விடம்விட்டு அகன்றான்.

"இல்லை யென்றுரைக்கலாற்றான்
ஏங்கினன் முனிவன் நின்றான்
நல்லவன் முகமே நம்பி
நடந்திலன் என்னு மாற்றம்
சொல்லலும் அரசன் சோர்ந்தான்
துயருறு முனிவன் நானிவ்
அல்லல் காண்கில்லேன் என்ன
ஆங்கு நின்றகலப் போனான்."

அந்நிலையில், மன்னனை விட்டுப்பிரிந்து செல்ல மனமில்லாத சுமந்திரன் அயர்ந்து சோர்ந்து அங்கே நின்றான். சிறிது நேரம் சென்றபின், மீண்டும் மயக்கம் தீர்ந்து கண்விழித்த காவலன் "நம்பி சிறிது தூரம் சென்றானோ? நெடுந்தூரம் நடந்தானோ?" என்று மிகவும் மெல்லிய குரலில் வினவினான். உள்ளதைக் கள்ளமின்றி உரைக்கும் தன்மை வாய்ந்த சுமந்திரன் "இராமன் தேவியோடும் இளவலோடும் வனத்தில் நெடுந்தூரம் நடந்தான்" என்று சொல்லி ஏங்கி நின்றான். அவ்வாறு சொல்லியபோதே அரசனும் ஆவிதுறந்து இறந்துபோனான்!

" நாயகன் பின்னுந் தன்தேர்ப்
பாகனை நோக்கி நம்பி
சேயனோ? அணியனோ? என்று
உரைத்தலும் அனையான் செய்ய
வேயுயர் கானந்தானும்
தம்பியும் மிதிலைப் பொன்னும்
போயினான் என்றான்; என்ற
போழ்தத்தே ஆவிபோனான்."

*இங்ஙனம், மன்னர் மன்னனாய் விளங்கிய தசரதன் சோகத்துள் எல்லாம் தலையாய புத்திர சோகத்தால் ஆவிசோர்ந்து மயங்கி விழுந்து மடியுநிலை கருங்கல் மனதையும் கரைப்பதாகும்.*



# அன்னையின் அன்பு

அன்பு தருவதில் அன்னை தந்தையினும் சிறந்தவள் ஆவாள். அன்னையை அன்பின் வடிவம் என்றும், அன்பின் தெய்வம் என்றும் அழைக்கலாம். அருட்கடலாய் விளங்கும் இறைவனையும் "அம்மையே!" என்று அடியவர் பலரும் அழைக்கின்றனரென்றால், அன்னையின் அன்பின் பெருக்கை எவரால் அளவிட்டு அறியமுடியும்? அளவிட முடியாத அன்பினைப் பொழிவதாலன்றோ "தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லை" என்றும், "தாயிற் சிறந்த தமரில்லை" என்றும் தக்கோர் போற்றுகின்றனர்? "அன்பே சிவம்" என்றபடி, இறைவன் அன்புருவாய் இலங்குவதுபோல், அன்னையும் அன்புருவாய் விளங்குகின்றாள். ஆகவே, தாயை அன்பின் தெய்வம் என்று ஆயிரமுறை கூறினும் அதிகமாகாது.

அன்புருவாய் அமைந்திலங்கும் அன்னை கருவடைந்த நாள் முதலாகத் தன்னலமறந்து பிள்ளை நலம் கருதியே வாழ்கின்றாள். பிறந்த குழந்தையைப் பத்தரை மாற்றுத் தங்கமெனப் பரிந்து போற்றுகின்றாள். அருமைப்பிள்ளைக்கு நோயும் நொடியும் அணுகாவண்ணம் அரிய நோன்பு நோற்று தவம் புரிகின்றாள். தன் மைந்தன் நோயடைந்தால் மனம் நடுங்கித்தான் மருந்துண்டு பத்தியம் கொண்டு தன்னலமிழந்து தவிக்கின்றாள். பசிவேளை அறிந்து பாலும் பழமும் பரிந்து அளித்துப் பாலனைப் போற்றுகின்றாள். இங்ஙனம் பருவம் நோக்கிப் பெற்றவள் செய்த பாடெல்லாம் நினைத்துப் பார்த்தால் ஊனும் உள்ளமும் உருகிடும். அன்னை செய்யும் நன்றிக்கு கைம்மாறென்றும் இல்லை என்று அறிஞர் கருதுகின்றனர்.

" அன்னையே அடியேனுக்கா
ஆற்றிய வருத்தமெல்லாம்
உன்னியே பார்க்கிற் கைம்மாறு
ஒன்றிலை; உனக்கோர் கோயில்
மன்னுற வமைத்துப் பொன்னால்
வடிவமும் சமைத்து வைத்து
முன்னுற வணங்கிச் செய்யுள்
மொழியினும் முற்றுறாதே! "

என்றபடி, அன்னைக்கொரு கோயில் அமைத்துப் பொன்னால் வடிவமும் சமைத்து வைத்துப் பண்பாடிப் பரவினாலும் போதிய கைம்மாறு புரிந்ததாக ஆகாது. " ஆயுள்காலம் வரை அடிமைத் திறம் பூண்டு வழிபட்டு, மூன்று புவனத்துப்பொருள் முற்றும் அளித்தாலும் அன்னையின் ஒரு நாள் வளர்ப்புக்கு அவை போதா " என்று அறிஞர் ஒருவர் அறிவிக்கின்றார். இன்னமும், கல்விக்கடலாய்—கற்பனைக் களஞ்சியமாய் விளங்கும் துறவியாகிய மகனை அறிவுடைய தந்தையும் அடிபணிந்து வணங்கலாம் என்றும், ஆனால் தாயை அத்துறவியும் அடிபணிந்து வணங்கவேண்டும் என்றும் அறநூல்கள் அன்னையின் பெருமையை அறிவிக்கின்றன. இத்தகைய சிறப்பமைந்த அன்னையின் அன்பையும், தன்னுயிர் கொடுத்தும் மகவுயிர் காக்கும் தாய்க்குல மாண்பையும் அடுத்துவரும் வரலாற்றில் அறியலாகும்.



# கமலவதி

முன்னொரு சமயம் சோழவளநாட்டில் திருவானைக் காவில், சுபதேவன் என்னும் சோழமன்னன் செங்கோல் செலுத்தி வந்தான். அறம் புரிந்து மறம் கடிந்த மன்னன் கமலவதி என்னும் மனைவியோடு வாழ்ந்து மனையறம் புரிந்து வருங்கால், மகவில்லையே! என மனம் தளர்ந்து 'மலர்மிசை யேகினான் மாணடி' தொழுதான். 'எவ்வண்ணம் வேண்டுகிறோம் அவ்வண்ணம் அன்றே இரங்கி ஈந்தருளும்' அரன் திருவருளால் கன்னியாயிருந்த கமலவதி கருப்பமுற்றாள். கருவடைந்து பத்துத் திங்களும் கழிந்த பின்னர், குழந்தை பிறக்கும் காலம் கிட்டியது. அவ்வமயம் அறிவுடைய ஒருவர் அங்கே வந்தனர். "நாழிகை ஒன்று கழித்துப் பிறந்தால் புவன மூன்றும் காக்கும் பெருமையைப் பச்சிளம் குழவி பெறும்" என்று பகர்ந்தார். வருங்கால வாழ்வையும் வரையறுத்துக் கூறும் பெரியவர் வாய்மொழியைக் கட்டழகு வாய்ந்த கமலவதி கேட்டாள். "அருமைக் குழந்தை ஏழுலகும் ஆளும் பதவியை அடையவேண்டும்" என அவல் கொண்டாள். "என் பிள்ளை இவ்வமயம் பிறவாமல் இன்னும் ஒரு நாழிகை கழித்துப் பிறக்கும் பரிசு என்ன?" என்று சிந்தனை செய்தாள். "எனது கால்கள் இரண்டையும் கயிற்றால் கட்டி என்னைத் தலைகீழாகத் தொங்கவிட்டுக் குறித்த வேளையில் அவிழ்த்துவிடுங்கள்" எனக் கொஞ்சமும் நெஞ்சம் கலங்காது கட்டளையிட்டாள்.

"மேனி தளர்ந்த வேளையில் இங்ஙனம் செய்தால் மரணவேதனை ஆகுமே!" என்று அவள் மயங்கவில்லை! "பிறக்கும் பிள்ளை ஆணாகவும் பிறக்கலாம்! பெண்ணாகவும் பிறக்கலாம்! கூன் குருடு செவிடு நீங்கிப் பிறத்தலும் அரிது!" என்றெல்லாம் அப்பாதுசிரோமணி எண்ணவில்லை!

சோதிடம் பொய்யோ? மெய்யோ? எனவும் ஐயங் கொள்ளவில்லை. "பாராளும் பதவியைப் பாலன் பெறவேண்டும்" என்னும் பேராவலுடன் "தலை கீழும் கால் மேலுமாகக் கட்டித் தூக்குங்கள்" என்று தயங்காமல் கூறிவிட்டாள்! அருகில் இருந்தவரும் அவ்வாறு செய்து அவிழ்த்துவிடவே, பிறப்பும் இறப்பும் இல்லா இறைவன் அருளால் ஆண்மகவு பிறந்தது. காலம் கடந்து பிறந்தமையால் கண்கள் கலங்கின. அம்மைந்தனை ஈன்ற அன்னையும் "என் செங்கண்ணா!" என்றுச் சொல்லுடன் ஆவிதுறந்து இறந்து போனாள்! அங்கமெலாம் நொந்து தளர்ந்து மெலிவுற்ற வேளையில்—தன் மேனியில் சிறிய புல் விழுந்தாலும் பெரிய கல் விழுந்ததுபோல் வேதனையாகும் வேளையில் இவ்வரிய வினையைச்செய்தால் அந்நங்கை எங்ஙனம் பிழைப்பாள்? பின்னர் சுபதேவன் பிறந்த பாலனைப் பொன்னேபோல் போற்றி வளர்த்தனன் என்றும், அக்குழந்தையும் உரிய பருவத்தில் மணிமுடிதாங்கி மாநிலம் காத்தது என்றும் 'கோச்செங்கட்சோழன்' வரலாற்றில் கூறப்படுகிறது. (இதன் விரிவு பெரிய புராணத்தில் விளங்கும்)

இவ்விரண்டாம் பகுதியில் இதுகாறும் கூறிய ஒவ்வொன்றையும் மனதில் இருத்திக்கொண்டு சிவனடியே சிந்தித்தொழுகும் சிறுத்தொண்டர் செயலையும், நாயகன் பாதமே நினைந்தொழுகும் திருவெண்காட்டு நங்கை செயலையும் சற்று சிந்தித்துப் பார்க்கவேண்டும்.



# மூன்றாம் பகுதி

## பயிரவருக்கு அமுது படைத்தல்

எண்ணில் காலம் மன்னுயிர்காத்த தசரதன் செவியில் எண்ணிலா அருந்தவத்தோன் இயம்பிய சொல் புண்ணிலாம் பெரும்புழையில் நெருப்பு நுழைந்ததுபோல் புகுந்தது! அருந்தவ முனிவன் சொல்லைக்கேட்ட அளவில் அரசர் கோமானது ஆருயிர் நின்று ஊசலாடியது! ஆனால், "கட்டிளங்குமரனைக் கறி சமைத்துத்தரவேண்டும்" என்று சிவனடியார் சொன்னதைக்கேட்ட சிறுத்தொண்டர் "உலகத்தில் உள்ள பொருளையெல்லாம் கேட்டனரே!" என்று உள்ளம் உவந்தார்! பட்டப்பகலில் வந்த பயிரவர் "பச்சிளம் பாலனைப் பெற்றவள் பிடிக்கும்போது பிதா வெட்ட வேண்டும்" என்று மொழிந்தது கேட்டும் அவர் மனம் நடுங்கவில்லை!

தன் காதல் திருமகன் 'தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக் கானடைந்தான்' என்னத்தரியாது தசரதன் வானடைந்தான்! ஆனால், அருமைக்கு ஒரு மகனாய் விளங்கிய சீராளனை — சிந்தைக்கினிய செல்வ மைந்தனை — மாரனை வெல்லும் பாலனை நாயனார் பனதார வாள்கொண்டு வெட்டினார்; உயிர் வாழ்ந்தார்! அதுவுமன்றி மகனைப்பெற்ற பேறெல்லாம் அடைந்ததாகவும் கருதி அகமகிழ்ந்தார்!

தன் பிள்ளை நன்றாய் வாழவேண்டும் என்று காதல் கொண்ட ஒரு தாயானவள் தன்னுயிரையே தத்தம் செய்தாள்! ஆனால், திருவெண்காட்டுநங்கை தான் பெற்ற பிள்ளையைத் தன்னெதிரே வைத்துத் தலை அரிவது கண்டும் தடுக்கவில்லை! இன்னமும், சின்னஞ் சிறுவனாம் சீராளனைச்

சீராட்டிப் பாராட்டிச் செல்வமாய் வளர்த்த கரங்களைக் கொண்டே கட்டிளங் குமரன் உடலைக் கண்டங் கண்டமாக வெட்டிக் கறி சமைத்தாள்! (அவள் நெஞ்சம் கன்மலையோ! இரும்போ? செம்மரமோ? பாறைக் கருங்கல்லோ? என்று கூடச் சிலர் ஐயுறலாம்.)

" தொடர்ந்த மும்மலமுருக்கி வெம்
பவக்கடல் தொலையக்
கடந்துளோர்களும் கடப்பரோ
மக்கண்மேற் காதல்? "

என்றபடி, முற்றும் கடந்த முனிவராலும் கடத்தற்கரிய காதலை நாயனார் கடந்துவிட்டார்! அருள்பொழியும் அரனிடம் அளவிலா அன்புகொண்ட அடியவர்கள் இல்லறத்தில் இருந்தாலும் தாமரையில் தங்கி இருக்கும் தண்ணீர்போலத் தரித்து இருப்பார்கள் என்று முன்னர் கூறியபடி, அவரை இல்லறஞானி எனக் கொண்டாலும் அவர் செய்தது அரிய செயலே ஆகும்

பயிரவராய் வந்த பெருமான் கொடிய நிபந்தனை ஒன்றும் கூறாமல், "பாலனை மட்டும் தந்தால் போதும்" என்று கேட்டிருந்தால், சிறுத்தொண்டரும் கொடுத்திருப்பார் என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை. அங்ஙனம் பிள்ளையை மட்டும் பயிரவரிடம் கொடுத்திருந்தால், அவரை அளவு கடந்து அறிஞர் பலரும் போற்றுவார் என்றும், அவ்வாறு செய்தல் அரியவற்றுள் எல்லாம் அரிய செயல் என்றும் சொல்லுவதற்கு இல்லை.

ஆனால், பெற்ற தாய் பிள்ளையைப் பிடிக்கவேண்டும்! பிதா பாலனைக் கோறல் வேண்டும்! அந்த சமயத்திலும்

பயிரவருக்கு அமுது படைத்த

தந்தையின் மனமும் தாயின் மனமும் வருந்தக்கூடாது! என்ன நிபந்தனை! அதற்கும் இணங்கி அவ்வாறே செய்ததுதான் ஆச்சரியம் தருவதாகும்! ஆகவே, அவர் சுற்றமும் தொடர்பும் நீத்து, துன்பமும் இன்பமும் அற்று, வெற்றுடல் மானம் தீர்ந்து வெறுக்கைமேல் வெறுக்கை வைத்த இல்லற ஞானியே ஆனாய், விருந்தாய் வந்த வயிரவர் பொருட்டு மைந்தனைக் கொன்றது அரியவற்றுள் எல்லாம் அரியதொரு செயல் என்பது அனைவருக்கும் ஒப்ப முடிந்ததொரு உண்மையாகும்.

“பற்றற்ற மனதுடன் பாலனை அரிந்தார்” என்று சிறுத்தொண்டர் செயலுக்கு ஒரு சமாதானம் சொன்னாலும், அவரது மனைவியார் துணிந்து செய்த அரிய செயலுக்கு அத்தகைய சமாதானம் சொல்லவே முடியாது. இசையினுமினிய மழலைச் சொல்லால் இன்பம் தரும் மக்களிடம் இரக்கம் என்பதே இல்லாமல் இல்லற ஞானியாய் விளங்கும் பெண்ணை—பிள்ளைப்பாசம் என்னளவும் கொள்ளாத பெண்ணை எங்கேனும் கண்டதுண்டோ? கதையிலேனும் கேட்டதுண்டோ? என்றால், கண்டதுமில்லை; கேட்டதுமில்லை என்னும் பதிலையே எவரிடத்தும் எதிர்பார்க்கலாம்.

பெற்ற குழந்தையைப் பொன்னேபோல் போற்றி வளர்க்கும் தாய்—மைந்தன் முகம் சற்று சிவந்தால் மேனி நடுங்கும் தாய்—பாலன் நெற்றி சுருங்கக் கண்டால் நெஞ்சம் பதைக்கும் தாய்—குழந்தை கண்ணில் நீர் வழிந்தால் தன் கண்ணில் உதிரம் கொட்டும் தாய் தனக்கிருந்த ஒரு மகனைத் தயக்கமின்றித் துணிந்தெடுத்துத் துண்டம் துண்டமாக அறுத்துக் கறி சமைக்க எவ்வாறு திருவுளம் கொண்டாளோ? யான் அறியேன்!

கணவனையன்றி வேறொரு தெய்வமும் கண்டிலாத அம்மங்கையின் உள்ளத்தில், கணவன் இட்ட கட்டளை எதுவாயினும் செய்துமுடிக்க வேண்டும் என்னும் எண்ணமும், அடியவருக்கு அமுதளிக்கும் ஆர்வமும் குடிகொண்டிருந்தன. ஆதலால், செயற்கரிய செயலைச் சிறிதும் தயங்காமல் செய்துவிட்டாள். முன்னொரு காலத்தில், வீரப்பெண்மணி ஒருவள் தன் குழந்தைக்குப் பால் கொடுத்துக்கொண்டிருக்கும் சமயம் முரசு முழக்கத்தோடு பகைவர் வந்ததை அறிந்து வெடுக்கென்று எழுந்து வேல் எடுத்துப் புதல்வன் கையில் கொடுத்தாள். முன்னோர் செய்த உன்னத வீரச்செயல்களைக் குறிக்கும் கற்றூண்களைக்காட்டி "இது போல் உன் பெயரும் உலகினரேத்தி வழிபடும் வண்ணம் கல்லில் நிற்கவேண்டும்" என்பதைக் குறிப்பால் உணர்த்தி "சமர்க்குச் செல்க" என்று சொன்னாளாம்! பால் மணம் மாறாத பச்சிளம் பாலனை—அமர்செய்ய ஆற்றலில்லாத சிறுவனைப் பார்த்துச் "செருமுகம் நோக்கிச் செல்க" எனச் சொல்லிய வீரத்தாயின் வீரத்தை என்னென்று புகழ்வது! சின்னஞ் சிறுவனை! என்று கொஞ்சமும் நெஞ்சம் கலங்காமல்—பருவமில்லை என்றும் பாராமல் வாளை எடுத்துப் புதல்வன் கையில் கொடுத்துப் "போர்க்குப் புறப்படு" எனப் புகன்றது இம்மாது சிரோமணிக்கு உள்ள வீர உணர்ச்சியன்றோ? இவ்வாறு, வீரர் குலத்தில் வந்த மங்கையர் மனதில் வீரமே நிறைந்துவிளங்குவதுபோலவே, சைவ மங்கையர் குலத்தில் பிறந்து கற்பில் சிறந்து விளங்கிய திருவெண்காட்டு நங்கை உள்ளத்தில் கணவன் கருத்தறிந்து நடக்கவேண்டும் என்னும் கொள்கையும், "இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற்பொருட்டு" என்னும் கொள்கையும் வேரூன்றி நிலைபெற்று விளங்கின. ஆகவே, அம்மங்கை பர்த்தாவுக்

கேற்ற பதிவிரதை ஆனாள். அதனால், பரமனடியார்க்கு அமுதிடலே பிறவிப்பயன் எனக்கொண்ட சிறுத்தொண்டர் விரதமும் வெற்றிபெற்று விளங்கியது.

“வாளால் மகவரிந்து ஊட்டவல்லேன் அல்லேன்” என்று பற்றெலாம் களைந்த பட்டினத்தடிகளும் வியந்து புகழும் சிறுத்தொண்டர் சிறப்பையும், அவரது மனைவியார் மாண்பையும் தெளிவுற விளக்க என்னொரு நாவால் இன்னும் என்னதான் எடுத்துரைத்தாலும், முழுதும் விளக்கியதாக முடிந்தது எனக் கொள்ளுவதற்குச் சிற்றறிவுடையேனது ஆற்றல் சற்றேனும் இடங்கொடாது. ஆதலால் இப் பகுதியை இம்மட்டோடு நிறுத்திவிட்டு இனிமேல் கதைப் பகுதியைக் கவனிப்போம்.

“காத்திருக்கும் வயிரவர் கடும் பசியால் வாடுவார்” என்னும் கருத்துடன் திருவெண்காட்டு நங்கை கறியமுது கடிதமைத்துக் கணவரிடம் தெரிவித்தாள். அவரும் விரைந்துசென்று அத்தியின்கீழ் வீற்றிருந்த அண்ணலைக் கண்டு அடிமலர் பணிந்து “அடியேன் வீட்டில் எழுந்தருளி அமுதுண்ண இசைய வேண்டும் என ஆவல் காட்டிய ஏழையேன் காலம் தாழ்த்தேன் என்றாலும், சொன்னபணி சமைத்தேன்; இனியொரு கணமும் தாழாமல் திருவுள மிரங்கி எழுந்தருளி வரவேண்டும்” என்று மொழிந்தார். அன்பர்தம் அன்பே திருமேனியாய் விளைந்ததென அமர்ந் திருந்த பெருமானும் அவருடன் வரலானார்.

இருவரும் இல்லம் வந்து சேர்ந்தனர். வயிரவராய் வந்த விமலரைத் தேவியார் வரவழைத்து வணங்கினார். சிவனடியாரைச் சிவமென வழிபடும் சிறுத்தொண்டர் பசியுடன் வந்த பயிரவக்கோலப் பெருமானைப் பூசனைசெய்து

போற்றிய பின்னர் அமுது படைக்க அனுமதி கேட்டார். பயிரவரும் படைக்கும்படி பணிக்கவே, அம்மையார் போனகமும் கறியமுதும் படைத்தார். உம்பர்பிரான் உடனே அதனை உண்ணாமல் "சிறுவன் உறுப்பெல்லாம் வைத்துக் கறிசமைத்தீரா?" எனக் கேட்டார். விமலர் அங்ஙனம் வினவவும்,

அன்னமனையார் "தலையிறைச்சி
அமுதுக்காகாதெனக் கழித்தோம்"
என்ன, "அதுவுங்கூட நாம்
உண்ப".தென்றார் இடர் தீர்ப்பார்.

அதனைக்கேட்டதும் தொண்டரும் தேவியாரும் சிறிது அயர்வுற்றனர். அரியாச் சிறுவனை அரிந்தபோதும்—கறியமுது சமைத்தபோதும கலங்காத இருவர் மனமும அவ வமயம் கலங்கிற்று. அமுதுண்ணத்தடை ஆயிற்றே! என அயர்ந்தனர். அந்நிலையில் சந்தனமங்கை அங்கு வந்து "அந்த தலையிறைச்சியையும் வந்த பெரியவர் அமுது செய்பொழுது விரும்பலாம் என்று அதனை அடியாள் கறியமுதாக அமைத்துள்ளேன்" என்று மொழிந்து எடுத்து வந்து கொடுத்தாள். அதனைப் படைத்த பின்னரும் அருட் குருபரன் அமுதருந்தாமல் "அடியவர் ஒருவர் அருகில் நின்றால் அழையும்" என்று உரைசெய்தார். அதுகேட்ட நாயனார் "அந்தோ! கெட்டேன்!" என்றலறி அருகிற் சென்று தேடினார். அன்று அடியவர் ஒருவரும் இல்லையாகும் படி அப்புண்ணியமூர்த்தி செய்த அருளால் ஒருவரையும் அங்கு காணவில்லை. வாடிய முகத்துடன் வீடு வந்தார்.

" இகத்தும் பரத்தும் இனியாரைக்
காணேன்! யானுந் திருநீறு

சகத்திலிடுவோர் தலைக்கண்டே
இடுவேன்" என்று தாழ்ந்து........

பணிந்து மொழிந்தார். வைகலும் அடியவர் விருந்தேடி வருவது வழக்கம். அங்ஙனம் இருந்துவருங்கால், அன்றொரு நாள் மட்டும் அடியவரைக் காணமுடியாத நிலை ஆச்சரியந் தருதல் இயல்பே ஆகும். வயிரவர் வருமுன்னர் ஒருமுறை அடியவரைத் தேடி சிறுத்தொண்டர் அலைந்து திரிந்தார். இப்பொழுது மறுமுறையாக அருகிற்சென்று தேடியும் ஒருவரையேனும் அவர் கண்டாரில்லை. பாவம்! வியப்பும் வருத்தமும் கொண்டவராய் "பரலோகம் சென்று தேடினும் அடியவரைப் பார்க்கமுடியாது போலும்!" என்னும் முடிவுடன் "இகத்தும் பரத்தும் இனி யாரைக்காணேன்!" என இயம்பினார். இன்னமும், "இல்லில் வந்திருந்தவர் மிகவும் வல்லமை வாய்ந்தவர்" என்பதையும், அடியவர் இல்லாதிருக்கும்படி அவரே அருள்செய்து விட்டனர்" என்பதையும், "அவ்வாறு செய்த திருவருளை அப்பெரியவர் அகற்றும் வரை அடியவரை எவ்வுலகிலும் கண்டுகொள்ள முடியாது" என்பதையும் அடியார்க்கும் அடியவரான நாயனார் அறிந்திருக்கலாம் என்று கொள்ளுவதற்கும் "இகத்தும் பரத்தும் இனி யாரைக் காணேன்!" என்னும் மொழிகள் இடந்தந்து நிற்கின்றன.

சிவனடியாரைக் காணப்பெறாது சிந்தை கலங்கிய சிறுத்தொண்டர் பயிரவப்பெருமான் அமுதுண்ணும் பொருட்டுத் தாமே அவரோடிருந்து அமுதருந்தி அவரை மகிழ்விக்க ஆவல்கொண்டார். ஆனால், உடனிருந்து உண்ணுவதற்கு அடியவர் ஒருவர் வேண்டும் என்பதே வைரவர் கருத்து. ஆதலால் தாமும் அவரோடிருந்து அருந்துவதற்குத்

தகுதி அமைந்த அடியவர் என்பது தோன்றத் தம்மையும் ஒரு தொண்டர் என்று தெரிவித்துக்கொள்ள நினைத்தார். வைரவர் விரும்பிய யாவும் உவந்தளித்து உண்ணச் செய்து உய்யவேண்டும் என்னும் ஆவலால் அங்ஙனம் கருதுவார் ஆயினர். ஆயினும் அருந்தவப் பெரியவர் முன்னிலையில் தம்மைத்தாமே அறிமுகம் செய்ய அஞ்சினார். "உடனிருந்து உண்ணுவீர்" என்று பயிரவப் பெருமான் பணியிடும் முன்னமே, "நீவிர் விரும்பினால் நானே உண்ணுவேன்; விடை தரவேண்டும்" என்று பண்புமிக்க பெரியவரிடம் பயமின்றிப் பகருவதற்குத் துணிந்தாரில்லை. "யானும் திருநீறு சகத்திலிடுவார்தமைக் கண்டே இடுவேன்" என்று மட்டும் இயம்பினார். அவனியில் திருநீறு அணியும் அடியவரைக் கண்டே யானும் வெண்ணீறு அணிவேன் என்றுரைத்து, அங்ஙனம் அணிவதால் அடியவனும் அடியவர் இனத்துள் ஒருவன் ஆவேன்" என்பதை மறைமுகமாக அறிமுகம் செய்து, வயிரவர் விரும்பியபடி அடியவர் இல்லாத அவ்வரிய வேளையில் தாமே அவரோடிருந்து உண்ணுவதற்கு எண்ணியதையும் குறிப்பாக அமைத்தார். இதனால், கடனறிந்து காலங்கருதி இடனறிந்து எண்ணியுரைக்கும் இவரது சொல்வன்மையும், அருங்குணப் பெரியவரிடம் அடங்கி ஒடுங்கி நடக்கும் இவரது பணிவும் இனிது விளங்கும்.



# பாலனை அழைத்ததும் பரமன் அருளும்

*“திருநீறு இடுவார்தமைக் கண்டே யானும் இடுவேன்” என்று நயம்பட நாயனார் நவின்றதும், உடனே வயிரவர், “உம்மைப்போல நீறிட்டார் உளரோ! உண்பீர்” என உரைத்தார். அவரும் அருகில் அமர்ந்து அம்மையாரிட்ட அமுதை உண்ணப் புகுந்தார். அவ்வமயம் வயிரவர் தடுத்தார். “உண்பீர்” என்று உரைத்த வாயால் உண்ணப் புகும்போது “உண்ணாதீர்; சற்றுப் பொறும்” என்று சொல்லுவாராயினர். திகைத்துச் சோர்ந்த தொண்டரை நோக்கி விகடப்பிரியராம் விமலர் “ஆறு மாதங்கள் ஆன பின்பு அமுதருந்தும் யாம் உண்ணுமளவும் தரியாமல் தினந்தோறும் வேளை தவறாமல் அன்னம் அருந்தும் நீயிர் முன்னதாக உண்ணப் புகுவது என்ன!” என்று வேடிக்கை செய்து வாயாடினார். “பாலன் ஒருவனைப் பெற்றிருந்தால் அழையும்” என்று பணித்தார். நாயனார் என் செய்வார் பாவம்! ஆதியும் அந்தமும் இல்லா அருட்குருபரனிடம் “இப்போது அவன் இங்கு உதவான்” என்று பணிவொடு பகர்ந்தார்.*

“ஆறு திங்களொழிந் துண்போம்
உண்ணுமளவுந் தரியாது
சோறுநாளு முண்டீர் முன்
உண்பதேன்! நம்முடன்றுய்ப்ப
மாறின் மகவு பெற்றீரேன்
மைந்தன்றன்னை யழையுமென
ஈறுமுதலு மில்லாதார்க்கு
‘இப்போதுதவானவன்’ என்றார்”

"உதவானாயினும் வந்தாலன்றி உண்ணேம்; அவனை அழையும்" என மறுமுறையும் மாதவப் பெரியவர் மொழியலானார். ஆணையை மறுக்க அஞ்சிய சிறுத்தொண்டரும் வாயிலருகே சென்று, "மைந்தா! வருவாய்" என்று அழைப்பாராயினர். தலைவர் பணியைத் தலைமேற்கொண்ட தேவியாரும், "செய்யமணியே! சீராளா! வாராய்; சிவனடியார் உடனுண்ண அழைக்கின்றார்" என்று ஓலமிட்டு அழைத்தார்.

இங்ஙனம், "பாலனை அழையும்" எனப் பயிரவர் பணித்ததும், "அவனை அரிந்தே கறியமுது அமைத்தோம்" என்று உள்ளதை உள்ளபடியே உரையாமல், "இப்போது உதவான்" என இயம்பினதும், அருமைப்பிள்ளை உயிருடன் இருப்பதுபோலவே அவனை அழைத்ததும், வாய்மையலவே எனச் சிலர் ஐயுறலாம். ஆனால், "குற்றமற்ற நன்மையைக் கொடுக்குமாயின், பொய்மையும் வாய்மையோடு பொருந்தும்" என்று அறிஞர் பலரும் கருதுகின்றனர். "பொய்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்குமெனின்" என்பது பொதுமறை. ஆகவே, உதவான் என உரைத்ததும், உயிருடன் வாழும் ஒருவனைக் கூவி அழைப்பதுபோல அழைத்ததும் வாய்மையின்பாலவாம் என்பது நன்கு விளங்கும்.

"பிள்ளை யுடனுண்ணப் பேசி யழைத்தாரன்பு
துள்ளு சிறுத்தொண்டர் சோமேசா!—வுள்ளுங்காற்
பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்குமெனின்"

என்னும் சோமேசர் முதுமொழி வெண்பா இங்கு சிந்திக்கத்தக்கது. இது நிற்க. இனிமேல், அன்னையும் பிதாவும்

அழைக்கும் முறையில் உள்ள வேற்றுமையைச் சற்று இங்கு கவனிப்போம்.

"வைய நிகழுஞ் சிறுத்தொண்டர்
மைந்தா! வருவாய் எனவழைத்தார்;
தையலாருந் தலைவர் பணி
தலைநிற்பாராய்த் தாமழைப்பார்
செய்ய மணியே! சீராளா!
வாராய்; சிவனடியார் யாம்
உய்யும் வகையாலுடனுண்ண
அழைக்கின்றார்; என்றேலமிட"

நூலறிவோடு சீலமும் பெற்ற நாயனார் "மைந்தா! வருவாய்" என்று மட்டும் மொழிகின்றார். அவரது மனைவியார் "செய்ய மணியே! சீராளா! வாராய்" என்று அன்பு ததும்பும் சொற்களால் அழைக்கின்றார். அன்பு ததும்ப அன்னையானவள் அழைக்கும் முறையில் இன்னொரு நயமும் அமைந்துள்ளது. "இறந்த பிள்ளையை எழுப்பும் வல்லமை இறைவனடியார்க்கே உண்டு" என்பதை உணர்ந்து, அவரால் இறந்த மகனையும் அழைத்தல் கூடும் என்பது தோன்றும் வண்ணம், "சிவனடியார் அழைக்கின்றார்" என்று சொல்லுவாராயினர். "அடேயப்பா! அருமை மகனே! ஓடிவாடா" என்று தன் பிள்ளையை மனம் போனவாறு தானே அழையாமல், "செய்யமணியே! சீராளா! வாராய்" என்று பொதுவாகச் சொல்லித் 'தன் பிள்ளை' என்னும் உரிமையும் பெருமையும் தோன்றுதிருக்கச் செய்தார். அறியாச் சிறுவனை அரிந்து கறிசமைத்து அடியவருக்குத் தத்தம்செய்து கொடுத்துவிட்டபடியால், அவனை அவருடைய சொத்து என மதித்த அம்மையார் "உன்னை உடைமையாகப் பெற்ற அடியவர் உடனுண்ண அழைக்கின்றார்"

என்று ஓலமிட்டு அழைக்கும் முறை அறிந்து மகிழ்வதற்கு உரியதாகும். "பாலன் வரப்பெற்றால் அடியவர் அமுது அருந்துவார்; அதனால் அப்பெரியவருக்கு அமுதளித்த பலனைப்பெற்று உய்யலாம்" என்னும் கருத்துடன் "யாம் உய்யும் வகையால் உடனுண்ண அழைக்கின்றார்" என்று உரைப்பாராயினர்.

இனி, சிறுத்தொண்டர் ஏன் "மைந்தா! வருவாய்" என்று மட்டும் மொழியலானார்? என்னும் கேள்வியை எவரும் கேட்பர். அடியவர் ஒருவரும் இல்லாத வேளையில் "அடியவரை அழையும்" எனப் பயிரவர் பணித்ததும் அல்லாமல், பாலனைக் கறியமுதாகப் படைத்த பின்னர் "பாலனை அழையும்" எனவும் பணித்தார். அவ்வாறெல்லாம் செய்த பயிரவர் செயலைப்பார்த்த சிறுத்தொண்டர் "வந்திருக்கும் வயிரவர் அமுதுண்ண வரவில்லைபோலும்!" என்றுகூட மனதில் எண்ணியிருக்கலாம். இன்னமும் "எங்கே அமுதுண்ணாமல் எழுந்துவிடுவாரோ?" என்று அச்சமும் எய்தியிருப்பார். அதனால் செய்வதொன்றறியாது திகைத்துச்சோர்ந்த நிலையில், "மாறின் மகவுபெற்றீரேன் மைந்தன்றன்னை யழையும்" எனப் பயிரவர் பணித்தபடியே, மைந்தனை வருவாய் என்று அழைத்தார். எனவே வயிரவர் வாயில் பிறந்த வார்த்தையைக்கொண்டே காதல் மகனை அழைத்தார் என்று கொள்ளலாகும்.

இவ்வாறு இருவரும் அழைக்கவே, இறைவன் திருவருளால் சிறுவனும் வரலானான். பரமன் அருளால் பள்ளியிலிருந்து வருவான்போல வந்த பாலனைப் பெற்றதாய் பரிந்தெடுத்து அணைத்துத்தழுவிக் கணவன் கையில் கொடுத்தாள். அவரும் "பயிரவர் உண்ணப்பெற்றோம்" என்னும்

பொலிவால் அகம் களித்து வயிரவருக்கு அமுது செய்விக்க விரைந்து வந்தார். அதற்குள், அருட் பெருஞ்சோதி ஆண்டவன் அங்கிருந்து மறைந்தருளவே,

" சிந்தை கலங்கிக் காணாது
திகைத்தார் வீழ்ந்தார் தெருமந்தார்;
வெந்த விறைச்சிக் கறியமுதுங்
கலத்திற் காணார் வெருவுற்றார்."

"எம்பெருமான் எங்கு சென்றாரோ?" என்று வாடி எங்கும் தேடி ஏங்கினார். அவ்வமயம், 'பற்றற்றியா முத்தர் தமை யெல்லாம் வாழைப்பழம்போல விழுங்குகின்ற' பரமன் பாகம் கொண்ட குலக்கொடியாம் பார்வதியோடும், பக்தி வலையில் படுவோனும் முருகப்பிரானோடும் விடைமேல் தோன்றி விண்ணில் நின்று காட்சி அளித்துக் கருணை செய்தார்.

" நித்த மணாளர்; நிரம்ப வழகியர் "

என்னும் மணிவாசகர் திருவாசகப்படி, நித்தமணாளர் நிரம்பிய அழகுடன் 'குனித்த புருவமும், கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும், பனித்த சடையும், பவளம்போல் மேனியில் பால் வெண்ணீறும்' கொண்டு விடைமேல் வீற்றிருந்தனர். விண்ணும் மண்ணும் பரந்தொளிவிசும் வடிவினையுடைய விமலனுக்கருகில், 'கொய்யாது குவியாது குமையாது மணம் வீசும் கோமளந்தெய்வ' மலராம் உமையவள் உடனிருந்து கண்கொள்ளாக்காட்சி அளித்தாள். இருவருக்கும் இடையில் வருணிக்கற்கரிய வடிவழகுடைய சுடர் வடிவேலனும் சோதிமயமாய் விளங்கினன். அச்சம் அகற்றும் அயில்வேல் ஏந்திய அண்ணலின் மேனியழகில் ஈடுபட்ட அருட்பிரகாச வள்ளலார் "நின் அழகிய

உருவத்தை என் கனவிலேனும் காட்டிக் கருணை புரிவாய்" எனப் பலமுறை வேண்டியும் பயன்பெறாமல்,

"பண்ணேறு மொழியடியர் பரவிவாழ்த்தும்
பாதமலரழகினை யிப்பாவி பார்க்கிற்
கண்ணேறுபடுமென்றோ கனவிலேனுங்
காட்டென்றாற் காட்டுகிலாய்! கருணையீதோ!"

என்று வருந்தும் முறை வேலவன் அழகை விளக்குவதாகும். (பேரழகு வாய்ந்த பொருளொன்றைப் பிறர் ஒருவர் பார்க்க நேரின் கண்படும் என்பது நம்மவர் கொள்கை) இங்ஙனம் கண்படும் என்று கருதும்படியான கட்டழகு வாய்ந்த கந்தவேளையும், பவளவிதழ்ப் பசுங்கொடியாம் பார்வதிதேவியையும், கல்லும் கனியத் திருவருள் புரியும் கருணைக்கடலாம் இறைவனையும் நாயனார் ஒருங்கே கண்டார். செய்தற்கரிய செயலைச்செய்து காணுதற்கரிய காட்சியைக் கண்குளிரக்கண்ட தொண்டர் என்பும் மனமும் கரைந்துருக விழுந்தெழுந்து வணங்கினார். பின்பு, அன்புருவாம் இறைவன் அன்பினைவென்ற அடியவருக்கு அருள் புரியவே, நானிலம் புகழும் நாயனாரும், மனைமாண்புடைய மனைவியாரும், மலர்முகம் வாய்ந்த மைந்தனும், சற்குணமுடைய சந்தனமங்கையும் வானவர் எதிர்கொள வான்வழி சென்று அழிவில் இன்பம் அடைந்தனர்.

மங்களம்.

